செந்தமிழ்ச் செல்வி

சைவசித்தாந்த நூற்பதிப்புக்

# கழக மணி விழா மலர்



# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



## உள்ளுறை

16.2.82







1. மணிவிழா மண்டப முகப்பு
2. மேதகு ஆளுநர் வருகை
3. தொடக்க விழாவில் பங்கேற்கிறார்







1. மேதகு ஆளுநர் தொடக்கவுரை
2. மாண்புமிகு ம. பொ சி. தலைமையுரை
3. மாண்புமிகு இராம வீரப்பன் நூல்வெளியீட்டுரை



1. 'கழக ஆட்சியர் வ. சு' வரலாறு வெளியீடு
2. கழக மணிவிழா மலர் வெளியீடு
3. திருவாட்டி சௌந்தரம் கைலாசம் உரை













1. திரு. மு. சதாசிவம் ] அவர்கட்குப் பாராட்டு
2. திரு. தி இராசமாணிக்கம் அவர்கட்குப் பாராட்டு
3. திரு. இரா. இளங்குமரன் அவர்கட்குப் பாராட்டு








1. மணிவிழா நூல்காட்சியில் மேதகு ஆளுநர்.
2. ,, மாண்புமிகு இராம. வீரப்பன்.
3. ,, மாண்புமிகு கா. காளிமுத்து.

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருசு | திருவள்ளுவர் ஆண்டு உ0கங, தை பிப்பிரவரி 1982 | பரல் சு |
| --- | --- | --- |

# சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மணிவிழா

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

தமிழகத்தின் நல்வினைப் பயனால் தோன்றிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு மணிவிழா! "இப்பொன் நீ! இம் மணி நீ! இம் முத்து நீ!" என்று செம்பொருட் சிவத்தை அப்பரடிகள் அருளிய முறையான், 1970இல் பொன்விழாக் கண்டு பொலிவுற்ற கழகம், இந்நாள் தன் மணிவிழாவை மாண்புறக் கொண்டாடியது. பவளவிழாவும், முத்துவிழாவும், நூற்றாண்டுவிழாவும் முறை முறையே சிறப்பக் கொண்டாடும்!

"மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை" என்றும், "ஊர் திரை வேலை யுலாவும் உயர்மயிலை" என்றும் ஆளுடைய பிள்ளையாரால் அருமையாகப் போற்றப்பெற்ற சென்னைத் திருமயிலையில் திகழும் இராசேசுவரி திருமண மாளிகையில் 16—1—1982, 17—1—1982 ஆகிய நாள்களில் மணிவிழா நிகழ்ந்தது. பொன் விழாப் பொலிந்த அத் திருமண மாளிகையே, மணிவிழாக் காணும் மாளிகையாகவும் விளங்கியமை தனிசிறப்புடையதாம்! ஆடற் பெருமான் திருக்கோலக் காட்சி திகழும் மேடையும், அணிமிகு அரங்கும், ஒளியும் வளியும் உலாவி இன்புறுத்தும் வெளியும் நடை வழியும், இயற்கையோடு இணைந்த இனிய சூழலும்—பிறவும், மணிவிழாச் சிறப்புக்கு அணிசேர்ப்பனவாய் அமைந்தன!

16—1—'82 சனிக்கிழமை பிற்பகல் 5 மணிக்கு நெடுங்குழல் மங்கலப் பண்ணிசை எழுந்தது! கூத்தப் பெருமான் ஆடலுக்குக்,

குழைந்து குழைந்து இசைபாடிக் கொஞ்சும் பண்ணிசையால் பரவி வணங்குவார்போல் குழலிசைக் கலைஞர் இசைத்தனர். மணிவிழாத் தொங்கலும் வரவேற்பும் வண்ணக் கோலமும் பண்ணிசையும் மகிழ்வுறுத்த, அரங்கத்துப் புகுந்தவர் நேரே விருந்தறைக்குச் சென்றனர்! உடலுக்கு ஊட்டமாம் உணவு வகைகளையே மாறிமாறிப் படைத்து மகிழ்வுறுத்துதற்கு இடமாக அமைந்த அவ் விருந்தறை, உயிருக்கு ஊட்டமாம்—ஊதியமாம்—உணர்வுகளை உவப்புற வாரிவாரி வழங்கும் காட்சி மாளிகையாய்த் திகழ்ந்தது. பழம்பெருமையும் புதுப்புகழ்மையும் ஒருங்கே விளக்கும் அக்காட்சிப் பொருள்கள் ஒருநாள் இருநாள் அளவில் தேடித் திரட்டிக் கொள்ளக்கூடியனவோ? தமிழர் நற்பேற்றான் வாய்த்த திருவரங்கரும் அவர் தம் அருமை இளவல் தாமரைச் செல்வர் வ. சுப்பையவேளும் அறுபான் ஆண்டுகளுக்கு மேலாகத் தும்பியாய்ச்—சுரும்பாய்—ஞிமிறாய்த் தேடிச் 'சாந்திற்றொடுத்த தீந்தேன்' போல ஈட்டிவைத்த தேட்டுகளாம் அவை! ஆகலின் கூட்டமெல்லாம் கூட்டுண்ணும் கொள்ளை விருந்தாகக் குலவியது அக்காட்சி!

புகழ் வாய்ந்த புலவர் படங்கள், அவர்கள் கடிதங்கள், கையெழுத்துகள், அரிய பதிப்புநூல்கள், வனப்புறு நூற்கட்டடங்கள், பரிசுச் சான்றுகள், கழக நூற் பேழைகள் இன்ன பல திறத்தனவாகக் காட்சியமைப்பு இலங்கியது. பார்த்தவர், படித்தவர், குறிப்பு எடுத்தவர், ஒளிப்படம் பிடித்தவர் என ஆர்வலர் பல திறத்தராய் விளங்கினர். அனைவர் முகத்திலும் பொலிவும், அரியன கண்ட உள்ளுவகையும் வெளிப்பட விளங்கின.

சரியாக ஆறு மணிக்குத் தமிழக ஆளுநர் மேதகு சாதிக் அலி அவர்கள் அரங்கத்திற்கு வந்து மேடையில் பொலிவுற நடுநாயகராய் அமர்ந்தனர். அவர்க்கு இருபாலும், மேலவைத் தலைவர் முனைவர் ம. பொ. சி. தமிழ்நாடு செய்தித் துறை அமைச்சர் மேதகு இராம. வீரப்பன், மேனாள் நடுவண் அரசின் நிதியமைச்சர் மேதகு சி. சுப்பிரமணியம், செட்டி நாட்டரசர் முனைவர் முத்தையா செட்டியார், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பேரா. சை. வே. சிட்டிபாபு, வள்ளல் திருமிகு நா. மகாலிங்கம், கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திருமிகு வ. சுப்பையா பிள்ளை ஆகிய பெருமக்கள் அமர்ந்தனர். எழில்மிகு ஒளி வெள்ளத்தின் ஊடே அவர்கள் வீற்றிருந்த காட்சி, அரங்கின் 'அழகுக்கு அழகு' செய்வதாய் அமைந்தது.

மணிவிழாவின் சார்பில் வரவேற்புக் குழுத் தலைவர் வள்ளல் நா. மகாலிங்கம் அவர்கள் கழகப் பணிச் சிறப்பையும், மணி விழா

மாண்பையும் எடுத்துரைத்து வந்திருந்த பெருமக்களையும் அறிஞர்களையும் பொதுமக்களையும் இனிய தமிழில் வரவேற்றனர்.

மேதகு ஆளுநர் அவர்கள் நூலின் சிறப்பு, கழகப் பதிப்பு, சமயச் சால்பு, தமிழின் தகவு இன்னவற்றை எடுத்துரைத்துத் தம் தொடக்க வுரையை ஆங்கிலத்தில் நிகழ்த்தினர்.

கழகத்தொடு நெடுந் தொடர்புடைய முயற்சித் தோன்றல் மேலவைத் தலைவர் **ம. பொ. சி.** விழாத் தலைமையேற்று மணி விழாக் காணும் கழக வெளியீட்டுச் சிறப்புகளையும், கழக ஆட்சியர் தாமரைச் செல்வர் வ. சு. அவர்களின் மேம்பட்ட திறங்களையும் அவர்கள் வழியே தமிழகம் பெற்றுவரும் நல்ல பல ஆக்கங் களையும் உணர்வு மல்க எடுத்துரைத்தார்.

தம் பொழுதையெல்லாம் அகரமுதலித் தொகுப்புப் பணிக்கே ஆளாக்கிக்கொண்டு, நூற்றுக்கு மேலும் அகரமுதலிகளைப் படைத்துள்ள முயற்சித் திருவாளர் பேராசிரியர் **மு. சதாசிவம்** அவர்களுக்குச் **''சொல்லாய்வுக் கலைச் செல்வர்''** என்னும் பட்டத் தையும், கூட்டுறவுத் துறையில் ஈடுபட்டிருந்தும் நுண்கலை ஆர்வலராய்த் திகழும் திருவாளர் **தி. இராசமாணிக்கம்** அவர் களுக்குத் **''தமிழகக் கோயிற் கலைச் செல்வர்''** என்னும் பட்டத்தை யும் மேதகு ஆளுநர் அவர்கள் மணிவிழாச் சார்பில் வழங்கிப் பொன்னாடை போர்த்தினர். பட்டம் பெற்ற **'கலைச் செல்வர்கள்'** தங்கள் நன்றியறிதலைத் தக்காங்குரைத்து மகிழ்ந்தனர்.

தமிழ்நாட்டு அரசின் செய்தித் துறை அமைச்சர் மாண்புமிகு **இராம. வீரப்பன்** அவர்கள் **'கழக ஆட்சியர் வ. சு. வரலாறு'** என்னும் நூலை வெளியிட்டு நூலுடையாரைப் பாராட்டியுரைத்தார். நூலாசிரியர்க்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். கழகத் தின் செயற்கரிய செயல் மாண்பு அமைச்சர் அவர்களால் பெரிதும் பாராட்டப்பெற்றது. நூலாசிரியர் கழக இலக்கியச் செம்மல் புலவர் **இரா. இளங்குமரனால்** தக்காங்கு நன்றியுரைக்கப்பெற்றது.

மேதகு **சி. சுப்பிரமணியம்** அவர்கள் கழக ஆட்சியர் வ. சு. அவர்கள் பணிநலம் பாராட்டியதுடன், மொழிநலம் குறித்துத் தாம் கொண்டுள்ள கருத்துகள் சிலவற்றையும் வெளியிட்டனர். செட்டி நாட்டு அரசர் **மு. அ. முத்தையா செட்டியார்** அவர்கள் மணி விழாக் காட்சித் திறப்புரையும், பேராசிரியர் **சை. வே. சிட்டிபாபு** அவர்கள் கழகப் பணி பாராட்டும் சிறப்புற வழங்கினர்.

கழகப் பொது மேலாளரும், நூலகத் தொண்டால் நுண்ணறி வாளர் பாராட்டுக்கெல்லாம் இடமாகியவருமாகிய **திருவாளர் இரா.**

முத்துக்குமாரசாமி அவர்கள், பங்கு கொண்டோர் அனைவருக்கும் நயத்தகு நன்றியுரை நவின்றார். மணிவிழாவின் முதல் நாள் நிகழ்ச்சி இனிதின் நிறைந்தது.

இரண்டாம் நாள் விழா 17—1—'82 முற்பகல் 9-30க்குக் 'கழகப்பணி பாராட்டு விழா'வாக நிகழ்ந்தது. பணிநலம் பாராட்டு தற்கு வந்த பெருமக்களின் அணிநலங்களையெல்லாம் தனித் தனியே எடுத்துரைத்துக் கழகப் பொது மேலாளர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் வரவேற்றனர். சென்னை உயர்நீதி மன்ற நடுவர் மேதகு சுவாமிக்கண்ணு அவர்கள் சிவப்பிழம்பாக நின்று, சிறந்த தொடக்கவுரையாற்றினர். தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர் நாவரசு முனைவர் மேதகு கா. காளிமுத்து அவர்கள் விழாத்தலைமையேற்று விழுமிய பொழிவு செய்தனர்.

தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் வி. ஐ. சுப்பிரமணியம், தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் மா. நன்னன், பைந்தமிழ்ச் செல்வர் திரு. ச. சிவகுமரன், மொழி பெயர்ப்புத்துறை இயக்குநர் முனைவர் அவ்வை து. நடராசன், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச. வே. சுப்பிரமணியம், சென்னைப் பல்கலைக்கழக இலக்கியப் பேராசிரியர் முனைவர் ந. சஞ்சீவி ஆகிய அரும்பேரறிஞர் பெருமக்கள் முறையே கழகம் செய்த மொழியியல் பணி, ஆட்சி மொழிப்பணி, சமயப் பணி, இலக்கியப்பணி, நூலகப்பணி, பல்துறைப்பணி என்னும் தலைப்புகளில் உணர்வு மீக்கூர்ந்த உரையாற்றினர்.

மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், உரைவேந்தர் ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, திருக்குறள் பீடம் அழகரடிகள், நுண்கலைச் செல்வர் அ. இராகவன், ஆராய்ச்சிப் பேரறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி ஆகிய பெருமக்கள் ஐவரின் திருவுருவப் படங்களை விழாத் தலைவர் அவர்கள் திறந்து வைத்து நினைவு கூர்ந்தனர்.

தமிழ்நாடு பதிப்பாளர் சங்கத்தின் சார்பில் அதன் தலைவர் கண. முத்தையா அவர்கள் தொண்டால் பழுத்த கிழவர் திரு. வ. சு. அவர்களுக்குப் பொன்னாடை போர்த்திப் பாராட்டுரை வழங்கினர்.

விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்த பெருமக்களுக்கெல் லாம் இனிய கவிதையால் நன்றியிசைத்தார் கவிஞர் திரு. சிவ. சிவராமலிங்கம் அவர்கள்.

விழாவின் நிறைவு நிகழ்ச்சி பிற்பகல் 5 மணிக்குத் தொடங் கியது. கலைமாமணி இசைப் பேரரசி சேலம் செயலக்குமி குழுவினர்

தெவிட்டாத் தீந்தமிழ்த் தேனிசை பொழிந்தனர். ''ஓவியம் பாடிற் றென்னப் பாடினுர் உருக யாரும்'' என்பதை மெய்ப்பித் தார் இசையரசியார். 'ஒன்றரை மணிப்பொழுது எப்படிக் கழிந்தது' என்பதே தெரியாவண்ணம் இசையரங்கு இனிக்க நிகழ்ந்து நிறைந்தது. இசைப் பேரரசியார்க்கு மணிவிழாச் சார்பில் இசைமாமணி சீர்காழி **கோவிந்தராசன்** அவர்கள் பரிசு வழங்கி, நிகழ்ச்சித் தொடக்கமாக இறைவணக்கமும் இசைத்தார்.

கழக நூல் வெளியீட்டுப் பெருமை, அறச் செயல்களின் அருமை, மறைமலையடிகள் நூல்நிலையத் தனிப்பெருஞ் சிறப்பு, கழக ஆட்சியாளர் வ. சு. அவர்களின் ஒப்பிலாத் தொண்டு ஆய வற்றை விரித்துரைத்து விழாவுக்கு வந்திருந்த பெருமக்களைக் கழகப் புலவர் இரா. இளங்குமரன் வரவேற்ருர். தமிழக நிதியமைச் சர் நாவலர் முனைவர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் விழாத் தலைமையேற்ருர்.

பேராசிரியர் அப்துல் கரீம் அவர்கள் எழுதிய **'இசுலாமும் தமிழும்'** என்னும் நூலை அறிஞர் கா. மு. செரீப் அவர்களும், ஈரோடு அரசு மருத்துவமனை மருத்துவர் மே. செ. இராசமாணிக்கம் அவர்கள் எழுதிய **'எலும்புப் பாதுகாப்பு'** என்னும் நூலைச் சென்னை மருத்துவக் கல்லூரி முன்னுள் முதல்வர் மருத்துவர் எம். நடராசன் அவர்களும் வெளியிட்டுப் பாராட்டுரைத்தனர். நூலாசிரியர்கள் நன்றி யுரைத்துத் தங்கள் அன்பினைப் புலப்படுத்தினர்.

திருவாட்டி **சௌந்திரா கைலாசம்** அவர்கள் கழகப்பணி பாராட்டிக் கவினுரை வழங்கினர். சிறப்பாகத் தனித்தமிழ்த் திரு வாட்டி **திருவரங்க நீலாம்பிகையார்** செய்த செயற்கருந் தொண்டு களைப் பெரிதும் நினைவு கூர்ந்து விரித்துரைத்தார்.

ஈழத்துத் தமிழர்களின் இனிய கலைச் செல்வமாகத் திகழ்ந்த நூலகம் அண்மையில் இனவெறித் தாக்கத்திற்கு ஆளாகி எரிந்து பட்டதற்கு உருகிய **பாவலர் முத்துசாமி** அவர்கள், கழகம் வெளி யிட்ட '1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழந்தமிழ் இலக்கண, இலக்கியப் பேழை' ஒன்றனை விலைக்கு வாங்கித் தமிழக நிதி யமைச்சர் நாவலர் அவர்களிடம் ஒப்படைத்துச் சேர்ப்பிக்க வேண்டிக்கொண்டார்.

விழாத் தலைமை ஏற்றிருந்த **நாவலர்** அவர்கள் தனித் தமிழ்த் திருவாட்டி **நீலாம்பிகையார்** திருவுருவப் படத்தைத் திறந்தும், கலை மணமும் கருத்து மணமும் ஒருங்கே திகழும் **'மணி விழா மலரை'** வெளியிட்டும் பேருரையாற்றினுர். அமைச்சர் மாண்பு

மிகு **இராம. வீரப்பன்** அவர்கள் முதன் மலரைப் பெற்றுக்கொண்டு பெருமைப்படுத்தினர். கழகப் பொதுமேலாளர் **திரு. இரா. முத்துக் குமாரசாமி** அவர்களின் நன்றியுரையுடனும் நாட்டுப் பண்ணுடனும் மணிவிழா நிகழ்ச்சிகள் இனிது நிறைவுற்றன.

மணிவிழாவில் கழக நிறுவனர் **திருவரங்கர்** புகழ் எடுத்துரைக்கப்பெற்றது. நிறைமலையாம் **மறைமலையார்** திறம் பேசப் பெற்றது; கழகம் தோன்றிய நாள் தொட்டு அதனை வளமுற வளர்த்துக் கட்டிக் காத்து வரும் **தாமரைச் செல்வர்** சீர்த்தி ஒவ்வொருவராலும் இனிதின் இயம்பப்பெற்றது. கழகத்தின் கட்டமைதியும், வெளியீட்டின் மாண்பும், முன்னோடிச் செயன்மையும் விதந்தோதப்பெற்றன. அவற்றையெல்லாம் மேல் வரும் பொழிவுப் பகுதியில் கண்டுகொள்க!

**வாழிய கழகம்!** **வாழிய வ. சு.**

---

## செம்மல் வாழ்க!

**[நெல்லை ந. சொக்கலிங்கம், எம். ஏ., டி. ஜி. டி.]**

''பழந்தமிழின் நூல்களுடன், பசுமை மிக்க
பல்வேறு துறைசார்ந்த நூல்கள் தம்மை
நலந்திகழ நற்றமிழின் நடையில் நாளும்
நாட்டமுடன் அச்சேற்றிப் பெருமை சேர்க்கும்
கழகத்துச் '**சுப்பையா பிள்ளை**' தொண்டைக்
கருத்துடனே மாமதுரைப் பல்கலை யூட்டும்
கழகத்தார் செம்மலெனும் சீருயர் பட்டம்
கடிதினிலே தந்துயர்ந்தார் வாழ்க! வாழ்க!!

மதுரைநகர்ப் பல்கலையின் கழகம் தந்த
மாண்புநிறை பட்டத்தால் தமிழர் ஞாலம்
பதிப்பாளர் ஒருவர்க்குப் பெருமை செய்து
பெருமிதத்தைப் பெற்றதுவே! வாழ்க! வாழ்க!!
புதுமையுடன் பட்டத்தைக் கொடுத்து வந்த
புலமைமிகு '**மாணிக்கனர்**' வாழ்க! வாழ்க!!
எதுகையுடைத் தமிழாலே '**நெல்லைக் கூத்தன்**'
எடுத்துரைத்த இனியவாழ்த்தும் பெறுக இன்னே!

# கழக மணிவிழாச் சொற்பொழிவுகள்

கழகத்தின் மணிவிழா முறையே 16, 17—1—82ஆம் நாள்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. 16—1—82 சனிக்கிழமை மாலையில் விழாத் துவங்கிற்று. மணி விழாக் குழுவின் தலைவர் உயர்திரு வள்ளல் நா. மகாலிங்கம் அவர்கள், வந்திருந்தோர் அனைவரையும் வரவேற்று உரை நிகழ்த்தினர். அவ்வுரைச் சுருக்கம் வருமாறு :

"இம் மணிவிழாவைத் தொடங்கி வைக்க வந்திருக்கும் தமிழக ஆளுநர் மாண்பமை சாதிக் அலி அவர்களே, விழாவிற்குத் தலைமை தாங்கவிருக்கும் தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவர் மாண்புமிகு முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்களே, கழக ஆட்சியர் வ. சு. அவர்களின் வரலாற்று நூலினை வெளியிட வந்திருக்கும் தமிழகச் செய்தி—அறநிலையத் துறை அமைச்சர் மாண்பு மிகு இராம வீரப்பன் அவர்களே, ஆட்சியாளர் பணி பாராட்ட வந்திருக்கும் முன்னாள் மைய அரசின் நிதியமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்களே, மணிவிழாக் காட்சி யினைத் திறந்து வைக்க வந்திருக்கும் செட்டிநாட்டரசர் முனைவர் முத்தையா செட்டியார் அவர்களே, கழகப் பணியினைப் பாராட்ட வந்திருக்கும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்களே, தாய்மார்களே, பெரியோர்களே !

நாம் அனைவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அறுபதாண்டுப் பணிகளைப் போற்றும் வகையில் இங்குக் கூடி யிருக்கிறோம். எண்பத்தைந்து ஆண்டு இளைஞர், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியர் தாமரைத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் மாபெரும் பணிகளைப் பாராட்டுவதற்கு இங்குக் கூடியிருக்கிறோம்.

கழகம் இதுவரையில் பல்வேறு துறைகளில் 1750 நூல்களை வெளியிட்டிருக்கிறது. நூல்களை வெளியிட்டிருப்பதுடன் பல அறநிலையங்களையும் நடத்திவருகிறது என்பதையும், கழகம் தன் வருவாயில் சரி பாதியை அறநிலையங்கட்கெனவே செல விட்டுவருகிறது என்பதையும் உங்களிடம் மகிழ்ச்சியோடு தெரி வித்துக் கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட கழகத்தைத் தோற்று வித்த திருவாளர் திருவரங்கம் பிள்ளை அவர்களுக்கும், அந் நாளில் அவருக்குத் துணைநின்ற பெரு மக்களுக்கும் இந்த

நேரத்தில் தமிழ்மக்களின் சார்பாக அஞ்சலி செலுத்திக் கொள்ளு கிறேன்.

திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் அருமுயற்சியால் நூற்றுக்கணக்கான தமிழ்நூல்கள் வெளிவந்துள்ளன. அது மட்டுமின்றிப் "பழந்தமிழ் இலக்கண இலக்கியப் பேழை" போன்ற நூற் பேழைகளையும் தயார் செய்து வெளியிட்டுள்ளது கழகம். இத்தகைய பேழை ஒவ்வொரு தமிழர் வீட்டிலும் இருக்க வேண்டிய ஒப்பற்ற செல்வமாகும்.

'தமிழில் என்ன இருக்கிறது ?' என்று கேட்பவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு ஒரு முறை சென்று வந்தால் இப்படிக் கேட்பது தவறு என்பதை உணர்வார்கள். ஒரு பத்தாயிரம் ரூபாயை எடுத்துக்கொண்டு கழகத்துள் சென்றால், அவ்வளவு ரூபாய்க்கும் அருமையான நூல்களை வாங்கிக்கொண்டு வரலாம்.

இந்த விழாவில் 'தமிழ்நாட்டில் எங்கும் எதிலும் தமிழே ஆட்சி செலுத்த வேண்டும்' என்று நாம் உறுதி எடுத்துக் கொள்ளவேண்டும்.

இவ் விழாவினைத் தொடங்கி வைக்கும் தமிழக ஆளுநர் மாண்பமை சாதிக் அலி அவர்கள் காந்தியடிகளின் வழி நின்று பணியாற்றுபவர். அந்தந்த மாநிலங்கள் அந்தந்த மாநிலத்துத் தாய் மொழியிலேயே ஆட்சி நடத்த மொழிப் பயிற்சி அளிக்க வேண்டும் என்று கூறுபவர். அவர்கள் இந்த விழாவைத் தொடங்கி வைப்பது சாலப் பொருத்த முடைத்தாகும். எனவே, இந்த விழாவினைச் சிறப்பாக நடத்தித் தருமாறு வந்திருக்கும் பெருமக்களைக் கேட்டுக்கொண்டு மணிவிழாக் குழுவின் சார்பில் அனைவரையும் வருக ! வருக ! என வரவேற்கிறேன்."

**தொடக்கவுரை :**

விழாவினைத் தொடங்கிவைக்கு முகத்தான், தமிழக ஆளுநர் மாண்பமை **சாதிக் அலி அவர்கள்** தமது உரையில் குறிப்பிட்ட தாவது :

"தமிழ்நாட்டிற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் தனிப் பெருந் தொண்டாற்றிய ஒரு கழகத்தைப் பாராட்ட அறிஞர் பெருமக்கள் இங்குக் கூடியுள்ளனர். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டிருக்கும் நூல்களின் எண்ணிக்கையைவிட அவற்றின் தரம்தான் முதன்மையானது.

இக் கழகம் தோற்றுவிக்கப்பெற்றது வணிக நோக்கத்துடன் அன்று. ஒரு நல்ல குறிக்கோளுக்காக—ஓர் இயக்கமாகத்—தமிழுக்குத் தொண்டு செய்வதற்கென்றே தோற்றுவிக்கப்பெற்ற தாகும். இலக்கணம் இலக்கியம் வரலாறு சமயம் இன்னபிற துறைகளில் அரிய தமிழ்நூல்களை வெளியிட்டிருக்கும் இக் கழகம், அறிஞர் பெருமக்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்கட்கும் பெரும்பயன் அளித்து வருகின்றது. தமிழ்நாட்டின் பெருநகர் களில் இதற்குக் கிளைகள் இருக்கின்றன. இக் கழகம் திருக் குறளைப் பரப்புதற்கு மேற்கொள்ளும் முயற்சி மிகப் பெரிது. திருக்குறள் மொழிபெயர்ப்புகள் பல பதிப்புகளாக வெளிவந் துள்ளன. தமிழ்ப் பண்பாட்டினை வளர்க்கும் வகையில் காலத்திற் கேற்ற நூல்களை வெளியிட்டுவரும் இக் கழகத்தின் முயற்சி பெரிதும் பாராட்டத் தக்கது'' என்றார்.

தலைமையுரை:

சட்டமன்ற மேலவைத் தலைவர், முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தமது தலைமையுரையில், ''இவ் விழாவில் தலைமைதாங்கு மாறு என்னைக் கேட்டுக்கொண்டதை எனக்குக் கிடைத்த ஒரு பெருமையாகக் கருதுகிறேன். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பொன்விழாக் கொண்டாடி, இன்று மணிவிழாவும் கொண்டாடுகிறது. ஐம்பதாண்டுக் காலம் தொண்டு செய்து ஒரு நிறுவனம் வாழ்கிறது என்பதே பெரிய செயல். அந்த நிலையில் இந்தக் கழகத்தை உயிர்வாழ வைத்து—உயிர் வாழவைத்தவர் உயிர் வாழ்கிறார் திரு. சுப்பையாபிள்ளை அவர்கள். அவர் ஒருவருடைய உழைப்பும் திறனும் ஆற்றலுந்தான் இப்படிப்பட்ட ஒரு நிறுவனம் வாழக் காரணமாயின. டாக்டர் உ. வே. சாமிநாத ஐயருக்குப் பிறகு அவர் செய்த பணியை—நாட்டிலே பரவச் செய்த—தொண்டுசெய்த—அடுத்த தகுதியில் ஒருவரைச் சொல்ல முடியுமானால், அது சுப்பையா பிள்ளையைத்தான் சொல்ல முடியும்; அந்தக் காலத்தில் சங்க இலக்கியங்களைப் பதிப்பிக்கத் துணிந்து முன் வந்தவர் திரு. சுப்பையாபிள்ளை அவர்கள்தாம்.

இவர் தமிழ்ப் புலவர்களை மதிப்பதற்கும், போற்றுவதற்கும் ஏற்பாடு செய்து வருகிறார். மறைமலையடிகளாரிடம் இவருக்கு மிகப் பெரிய மதிப்புண்டு, அடிகளாருடைய கையெழுத்துப் படிகளை இவர் காப்பாற்றி வைத்திருக்கும் திறமை இருக்கிறதே—அதற்காகவே இவரைத் தனியாகப் பாராட்டவேண்டும்.

புலவர்கள் நூல் எழுதினால் அதை வெளியிட யாரும் தயங்கும் அந்தக் காலத்தில், இவர்களே புலவர்களைத் தயாரித்து

—அவர்களின் புலமையை வளர்த்து நூல் விற்பதற்கான சந்தையை இவர்களே கண்டு அவ்வளவும் செய்தவர் திரு. சுப்பையாபிள்ளை அவர்களாவார்.

இந்நாளில் புத்தகங்களைப் படிப்பவர் குறைவு. புத்தகம் வாங்குகிற பயிற்சி—பழக்கம் ஆகியன ஒரு மதக் கொள்கை போன்று வளரவேண்டும். தமிழுக்கு இன்னமும் ஒரு சந்தை (Market) ஏற்படவில்லை. நம் வீடுகளில் திருமணம் நடந்து பெண்ணைக் கணவன் வீட்டுக்கு அனுப்பும்போது ஒரு புத்தகப் பீரோவையும் கொடுத்தனுப்பும் பழக்கம் ஏற்படுவது நல்லது. அப்போதாவது மாப்பிள்ளைகட்குப் புத்தகம் படிக்கும் பழக்கம் ஏற்படும். நாம் திருமணங்களில் எத்தனையோ அர்த்தமற்ற செலவுகளைச் செய்கிறோம். இன்னும் வேறு எவற்றுக்கெல்லாமோ வீண் செலவு செய்யாமலா இருக்கிறோம்? அப்படிப்பட்ட நாம் இப்படியொரு பழக்கத்தை மேற்கொண்டாலென்ன?

இந்த மணிவிழா நாயகராகிய திரு. சுப்பையாபிள்ளை அவர்களையும், மணிவிழா நடத்தும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தையும் நான் வாயார வாழ்த்துகிறேன்.''

மைய அரசின் முன்னாள் நிதியமைச்சர், **மாண்புமிகு சி. சுப்பிரமணியம்** அவர்கள் கழக ஆட்சியாளரின் பணிகளைப் பாராட்டி நிகழ்த்திய உரைச் சுருக்கம் :

''மனிதனுக்கு வயது ஆக ஆக முதுமைதட்டுகிறது. ஆனால் இதுபோன்ற நிறுவனங்களுக்கு வயது ஆக ஆக மேலும் மேலும் இளமை வளர்கின்றது. ஒரு நிறுவனம் வளரவேண்டுமானால் அவ் வளர்ச்சி அதில் பணியாற்றுகிறவர்களையும் நடத்திச்செல்பவர்களையும் பொறுத்திருக்கிறது. மரத்தை ஆணிவேர் காப்பதுபோல் திரு. சுப்பையா பிள்ளையவர்கள் ஆணிவேராக இருந்து இக் கழகத்தைக் காத்துவருகிறார்கள். திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் இளமையோடிருப்பதற்குக் காரணம் அவர்கள் இப் பணியில் ஈடுபட்டிருப்பதுதான்.

நான் அவர்களை 30 ஆண்டுகளுக்குமேல் அறிவேன். தமிழ்நாட்டில் நான் அமைச்சராக இருந்தபோது அடிக்கடி அவரைக் காணும் வாய்ப்பு எனக்கிருந்தது. அவர்கள் எப்போது என்னைச் சந்தித்தாலும் கழகத்தைப்பற்றித்தான் பேசுவார்களே தவிர வேறு பேச்சு இராது. எந்தக்காலத்திலும் அவர் சொந்தப் பிரச்சினைகளை என்னிடத்தில் கொண்டுவந்ததில்லை. அவர்கள் தம் வாழ்க்கை முழுவதுமே கழகத்திற்காக அர்ப்பணித்தவர்கள்.

அவர்கள் நூறாண்டு வாழ்ந்து தமிழுக்குப் பணியாற்றவேண்டு மென்று நாம் எல்லோரும் வாழ்த்துவோமாக.

அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் அன்னியர் ஆட்சியும் அன்னிய மொழி ஆதிக்கமுமே இருந்துவந்தன. அக்காலத்தில் ஆங்கிலத்தில் பேசினால்தான் பெருமை என்றிருந்தபோதே தமிழ் மொழி வளர்ச்சிக்கெனவே இக் கழகத்தை ஆரம்பித்தார்கள் என்றால், அதிலேதான் சிறப்பு இருக்கிறது.

அவர்கள் 1750 நூல்களை வெளியிட்டிருப்பதாகக் கூறு கிறார்கள். உலகத்திலே இருக்கின்ற புத்தக நிறுவனங்களை எடுத்துக்கொண்டால் மற்ற நாடுகளில்கூட இந்த அளவுக்குப் புத்தகங்கள் வெளியிட்ட நிறுவனங்கள் உண்டா என்பதை ஆராய்ந்துதான் பார்க்கவேண்டும். புத்தகங்களை வெளியிட்டது மட்டுமின்றி அவற்றை விற்பதற்குரிய முயற்சிகளையும் எடுத்து, மக்கள் பரவலாகப் புத்தகங்களைப் படிப்பதற்கு ஏற்பாடு செய் துள்ளார்கள்.

ஆகவே, இந்தக் கழகம் செய்திருக்கும் பணி பெரும்பணி. தமிழ் வளர்ந்தால்தான் அதை எல்லாத் துறைகளிலும் பயன் படுத்தமுடியும். புதிய கருத்துகள், ஆராய்ச்சிகள் வளர்ந்திருக்கும் இந்தக் காலத்தில், பிறமொழிச் சொற்களைத் தமிழ் தனதாக்கிக் கொண்டு வளரவேண்டும். நான் சொல்வனவற்றை யெல்லாம் அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதில்லை. அதை நல்ல முறையில் சிந்திக்கவேண்டும். தமிழ் மேலும் மேலும் வளர வேண்டும்; எல்லாத் துறைகளிலேயும் அது பயன்படவேண்டும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்கமுடியாது.

ஆகவே, தமிழ் வளர்ச்சியடைய அரசும் கடமைப்பட்டிருக் கிறது. முயற்சியும் எடுத்துவருகிறது. அந்த முயற்சி இன்னும் நல்ல முறையில் பயன்பட்டு என்றும் தமிழ் வளர வழிவகுக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

நம்முடைய சுப்பையா பிள்ளை அவர்களுக்கும், அவர்களுடன் ஒத்துழைத்து இந்தக் கழகத்தை வளரச்செய்தவர்கட்கும்—வளரச் செய்கின்றவர்கட்கும் நாம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக் கிறோம்.''

**கழக நூலாசிரியர்கட்குப் பட்டம் வழங்குதல் :**

கழக நூலாசிரியரும், பன்மொழிப் புலவரும் ஈரோடு வாசவி கல்லூரித் தமிழ்ப்பேராசிரியருமான திரு. **மு. சதாசிவம்,** எம். ஏ,

**எம். லிட். டிப். லிங்.** அவர்கட்கும், கூட்டுறவுச் சங்கங்களின் இணைப் பதிவாளரும், கழக நூலாசிரியருமான திரு. **தி. இராசமாணிக்கம், பி. ஏ., பிகாம்., விசாரத்** அவர்கட்கும், கழக மணிவிழாக் குழுவின் சார்பில், தமிழக ஆளுநர் மேதகு சாதிக் அலி அவர்கள் முறையே **"சொல்லாய்வுக் கலைச்செல்வர்", "தமிழகக் கோயிற் கலைச்செல்வர்"** என்னும் பட்டங்களை வழங்கிச் சிறப்பித்தார்.

**மணிவிழாக் காட்சித் திறப்பு :**

கழக மணிவிழாக் காட்சியினைத் திறந்து வைத்துச் செட்டி நாட்டரசர், முனைவர் அ. முத்தைய செட்டியாரவர்கள் பேசுகையில்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்களை ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளாக எனக்குத் தெரியும். அவர்கள் தன்னலமில்லாமல் தமிழுக்காக உழைப்பவர்கள். மறைமலையடிகள் நூலகம், பல்லா வரத்தில் கலைமன்றம் என்றெல்லாம் ஏற்படுத்தித் தமிழுக்குத் தொண்டு செய்து வருகிறார்கள். இங்கு வந்திருக்கும் அமைச் சரவர்கள் இவற்றையெல்லாம் அரசுக்கு எடுத்துச் சொல்லி, இக் கழகத்தின் தமிழ்ப் பணிக்கு உதவுமாறு செய்யவேண்டும். இது வரையில் ஐந்து உலகத் தமிழ் மாநாடுகள் நடைபெற்றிருக் கின்றன. இந் நிலையில் வெளிநாடுகளிலுள்ள தமிழர்களுக்கு இன்னமும் போதிய தமிழ்நூல்கள் கிடைப்பதில்லை. அரசு முன் வந்து ஆண்டுதோறும் ஒரு கோடி ரூபாய்க்குப் புத்தகங்களை வெளிநாடுகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்யவேண்டும். திரு. சுப்பையாபிள்ளை அவர்கள் நீடுழி வாழவேண்டும். அவர்களின் தமிழ்ப்பணி சிறக்கவேண்டும். கழகம் மேன்மேலும் வளர வேண்டும் என வாழ்த்துகிறேன்" என்று குறிப்பிட்டார்.

**கழகப் பணி பாராட்டு:**

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், **பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு அவர்கள்** கழகப் பணியினைப் பாராட்டிப் பேசி யதன் சுருக்கம்:

"இங்குத் திரு. சுப்பையா பிள்ளை அவர்களைப் பாராட்டிப் பேசிய மைய அரசின் முன்னாள் நிதி அமைச்சர் மாண்புமிகு சுப்பிரமணியம் அவர்கள், திரு. பிள்ளை அவர்களைப்பற்றி ஒன்றைக் குறிப்பிட்டார்கள். அஃதாவது, இவர்கள் எந்த அலு வலரிடமும் ஏதாவதொன்று பேசவேண்டுமென்று சொன்னால் திரு. பிள்ளை அவர்கள் கழகத்தைப் பற்றித்தான் பேசுவார்கள்.

அஃது உண்மை. நான் பள்ளிக் கல்வி இயக்குநராக இருந்த போது, என்னிடம் பேசும்போது "நான் எனக்காக ஒன்றும் கேட்க வரவில்லை. ஆனால், கழக நூல்களை எல்லாரும் படிக்க வேண்டும். அதைப்பற்றி நீங்கள் எடுத்துக்கூற வேண்டும்" என்பார்கள். அஃது உண்மையிலும் உண்மை.

கழகம் பள்ளிமாணவர்களுக்கு 'நோட்ஸ்' வெளியிட நினைத் திருந்தால் நிறையச் சம்பாதித்திருக்கலாம். ஆனால் சுப்பையா பிள்ளை அவர்கள் அதில் ஈடுபடவில்லை. வியாபார நோக்கமற்ற ஒருகழகம் இன்று இருக்கிறது என்று சொன்னால், அது 'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' என்று அறுதியிட்டுக் கூறலாம்.

கழக நூல்கள் எல்லா நூலகங்களிலும் இருக்கவேண்டும் என்ற காரணத்தினால், சங்க இலக்கியங்களை யெல்லாம் வகைப் படுத்தி, அவற்றை ஒரு பேழையில் வைத்துக் கொடுத் துள்ளார்கள். அமைச்சரவர்கள் செய்தித்துறையிலே இருக்கின்ற காரணத்தால், கழகத்தை எந்த அளவுக்குத் தமிழ் உலகிற்குப் பயன்படும்படி செய்யமுடியுமோ அந்த அளவிற்குப் பயன்படச் செய்யும் நிலையினை உருவாக்குவார்கள் என்று நினைக்கிறேன்.

கழகம் ஆங்கிலத்துக்கு எதிரியன்று. அது பல ஆங்கில நூல்களை வெளியிட்டிருக்கின்றது என்ற உண்மை பலருக்குத் தெரியாது. ஜேம்ஸ் ஆலன் என்னும் மேலைநாட்டுத் தத்துவ அறிஞரின் நூல்களை அப்படியே ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளது. இன்னும் "Sips from the Sangam Cup" என்னும் ஆங்கில நூலையும், அதுபோன்ற வேறு நூல்களையும் வெளியிட்டிருக்கிறது. தமிழின் பெருமை, தமிழ்க்கலை, நாகரிகம் முதலியன பிற நாட் டாருக்குத் தெரியவேண்டுமானால் அவை ஆங்கிலத்தில் வெளிவர வேண்டும்.

ஆகவே, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தன்னைச் சேவை சித்தாந்தக் கழகமாக ஆக்கிக்கொண்டு, தமிழுக்கு ஆங்கிலமும் - ஆங்கிலத்துக்குத் தமிழும் துணை நிற்கும் வகையில் பணியாற்றவேண்டும். கழகப் பணியினை ஒரு தெய்விகப்பணி என்று சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். திரு. சுப்பையாபிள்ளை அவர்கள் எதையும் தெரிந்து செயலாற்றும் திறம் படைத்தவர்கள். அதனால்தான் கழகம் இத்துணை அளவு வளர்ந்திருக்கிறது. 'சுப்பையா ஒரு சூப்பர் ஐயா' என்று சொல்லவேண்டும்.

'கழகம் ஒரு பட்டை தீட்டப்பெற்ற வைரக்கல்' என்று சொல்ல வேண்டும். கழகத்தின் இந்த மணிவிழா ஓர் ஆரம்பக் கட்டம்.

இதற்கு நாம் உதவிசெய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். இக் கழகப் பணி மேலும் மேலும் வளரவேண்டும். திரு. சுப்பையா பிள்ளை வாழ்க ! அவர் தொண்டு வாழ்க!''

**''கழக ஆட்சியர் வ. சு'' நூல் வெளியீடு :**

கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் எழுதிய ''கழக ஆட்சியர் வ. சு'' என்னும் வரலாற்று நூலினைத் தமிழகச் செய்தி அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் வெளியிட, அதனைச் செட்டி நாட்டரசர் முனைவர் அ. முத்தைய செட்டியாரவர்கள் பெற்றுக்கொண்டார்கள். நூலினை வெளியிட்டு உரையாற்றிய அமைச்சரவர்கள் ஆற்றிய உரைச் சுருக்கம் வருமாறு :

''இந்தக் கழகத்தை உருவாக்கிய ஒரு தமிழ்ப் பெருந்தகை யாளருக்குத் தம்பியாகப் பிறந்து அவரோடு இணைந்து அவர் துவக்கிய அந்தத் தொண்டினைத் தொடர்ந்து, இதனை ஒரு மகத்தான நிறுவனமாக மாற்றித் தமிழ்ச் சமுதாயத்தோடு - தமிழ் மொழியோடு தம்முடைய வரலாற்றை இணைத்துக் கொண் டிருக்கிற ஒரு பெரியவர்—இந்தக் கழகத்தினுடைய ஆட்சியர் திரு. வ. சுப்பையா அவர்களுடைய வரலாற்றினை வெளியிடு கின்ற இந்த மிகப் பெரிய பேற்றினை எனக்களித்த இந்தக் கழகத்தின் பொறுப்பாளர்களுக்கும், மணிவிழாக் குழுத் தலைவர் திரு. மகாலிங்கம் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரு நிறுவனம் நடந்து வருகிறது என்பதற்கும், பாடுபட்டு வருகிறது என்பதற்கும் உள்ள அடிப்படை வேறுபாட்டை நாம் உணர்ந்தால்தான், இந்த நிறுவனத்தையும், இதனைக் கட்டிக் காத்து வளர்த்து வருபவர்களுடைய மிகப் பெரிய சிறப்பினையும் நாம் உணர்ந்துகொண்டவர்களாவோம்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நூல்களை வெளியிட்டு இலாபத்தைத் திரட்டிக்கொண்டு, அல்லது தொழில் நடத்திக் கொண்டிருக்கிற ஒரு தொழில் நிறுவனம் அன்று என்பதை நாம் இந்த நாட்டு மக்களுக்கு உணர்த்தவேண்டிய கட்டத்தில் இருக்கிறோம்.

அறுபதாண்டுகட்கு முன்னர், இப்படியொரு நிறுவனத்தைத் தோற்றுவிக்க வேண்டும் என்ற எண்ணம் வந்ததே இந்த நாட்டின் நற்பேறு. இப்படியொரு கழகம் தோன்றியிராவிட்டால்,

தமிழ் இலக்கியங்களையும், திருக்குறளையும் நம் நாட்டு மக்களிடையே பரப்புவதற்கு யாரேனும் முன்வந்திருப்பார்களா என்ற ஐயமே நமக்குத் தோன்றுகிறது.

ஓர் அறுபதாண்டுக் காலம் தமிழுக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கிற ஒரு நிறுவனத்தின் மணிவிழாவை நாம் இந்த மண்டபத்துக்குள்ளேயே ஓர் 200 பேர், 300 பேர் அல்லது 500 பேர் கலந்துகொண்டு நடத்திவிடுவதால் முழுப்பயன் கிடைக்காது; இது போய்ச் சேரவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர வேண்டும். பாமர மக்களிடையே - சமுதாயத்தின் அடித் தளத்திலே இருப்பவரிடம் இதைப் பரப்ப வேண்டும்.

கழகம் ஒரு வியாபார நிறுவனம் என்று யாராவது கருதினால், அவர்கள் தமிழ்நாட்டின் வரலாற்றினை அறியாதவர்கள் என்று பொருள். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வரலாறு என்பது தமிழ்மொழியின் வரலாறு. 'கழகம்' என்ற பெயரையே முதன்முதலில் அறிமுகப்படுத்தியது சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகமே.

நெறியோடு வாழ்ந்துகொண்டிருப்பவர் நம்முடைய சுப்பையா பிள்ளை. அவர் தொண்டு, நடத்துகின்ற நிறுவனம் எல்லாமும் அப்படியே. அவர்கள் நடத்திக்கொண்டிருக்கிற மறைமலையடிகள் நூலகத்தைத் தமிழனாகப் பிறந்தவரெல்லாம் பார்த்தே தீர வேண்டும். நாட்டில் எத்தனையோ நூலகங்கள் இருக்கின்றன. ஆனால் தமிழுக்கென்று ஒரு நூல்நிலையத்தைப் பார்க்கவேண்டுமானால் மறைமலையடிகள் நூலகத்தைப் பார்க்க வேண்டும்.

கழகம் அரசு சார்பற்ற ஒரு தமிழ் வளர்ச்சிக் கழகமாகப் பணியாற்றிக்கொண்டிருக்கிறது. இந்த நேரத்தில் கழகத்தின் மணிவிழா நடைபெறுவதும், அதற்கு ஆணி வேராக இருக்கிற "கழக ஆட்சியர் வ. சு." அவர்களின் வரலாற்று நூலை வெளி யிடுவதும் சிறந்த நிகழ்ச்சிகளாகும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். இதில் வ. சு. அவர்களுடைய வரலாறு மட்டுமன்று; தமிழ் எப்படி வளர்ச்சி அடைந்தது என்கிற பாடமும் இருக்கிறது. எனவே, கழக ஆட்சியர் வாழ்க! வாழ்க! என வாழ்த்துகிறேன்.

———

"வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"        (குறள்-ரு0)

# கழகப்பணி பாராட்டு விழா

கழக மணிவிழாவின் இரண்டாம் நாள் நிகழ்ச்சியாக 17—1—82 ஞாயிறு அன்று காலை 9-30 மணியளவில் தொடங்கிக் கழகப்பணி பாராட்டு விழா நடைபெற்றது.

வரவேற்புரை:

கழகப் பொது மேலாளர் உயர்திரு. இரா. முத்துக்குமார சாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் தமது வரவேற்புரையில் விழாவில் உரையாற்ற வந்திருந்த அறிஞர் பெருமக்களையும், விழாவிற்கு வருகை தந்த தமிழ் அன்பர்கள் அனைவரையும் வருக! வருக! என அன்புடன் வரவேற்றனர்.

தொடக்கவுரை:

உயர்நீதி மன்ற நடுவர் மாண்பமை எஸ். சுவாமிக் கண்ணு அவர்கள் தமது தொடக்க உரையில் கழகத்தின் தோற்றம், வளர்ச்சி, பணிச்சிறப்பு ஆகியனபற்றி விளக்கமாக எடுத்துரைத் தனர். அவர் மேலும் பேசுகையில்,

"கழகம் கடந்த 56 ஆண்டுகளாகச் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் இலக்கியத் திங்கள் இதழை நடத்தி வருவது மிகவும் பாராட்டத்தக்கது. நான் சிறிது காலம் அரசாங்க வெளியீடான ஆங்கில இதழ் ஒன்றின் ஆசிரியராகப் பணியாற்றிய காரணத் தால் ஒரு திங்களிதழை 56 ஆண்டுகள் தொடர்ந்து நடத்தி வருவதைப் பாராட்டுகிறேன்" என்று குறிப்பிட்டார்.

தலைமையுரை:

தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர் மாண்புமிகு முனைவர் கா. காளிமுத்து அவர்கள் ஆற்றிய தலைமையுரைச் சுருக்கம்:

"தென்னாட்டின் மாக்மில்லன் என்று நீண்ட காலத்திற்கு முன்னாலேயே புகழ் பெற்றிருக்கும் நூற்பதிப்புக் கழகம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்பதனை நாம் அறிவோம். நம் நாட்டிலே உள்ள எந்த வீடாக இருந்தாலும் சிவகாசியில் செய்யப்பட்ட தீப்பெட்டி ஒன்று இருக்கும் என்று சொல்வதுண்டு.







1. கழகப் பணி பாராட்டு விழாவில் பங்கேற்ருேர்
2. மாண்பமை நடுவர் எஸ். சாமிக்கண்ணு அவர்கள்
3. மாண்புமிகு டர்க்டர் கா. காளிமுத்து தலைமையுரை








1. கழகச் செயற்குழுத் தலைவர் மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்கட்குப் பாராட்டு. 2. ஆட்சியர் அவர்கட்குப் பாராட்டு
3. டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் உரை.







1 சேலம்_செயலட்சுமி 'தேவார இன்னிசை'

2. சேலம்_செயலட்சுமி அவர்கட்குப் பாராட்டு

3. சீர்காழி கோவிந்தராசன் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடுதல்







1. மாண்புமிகு டாக்டர் நாவலர் தலைமையுரை
2. ‘ எலும்புப் பாதுகாப்பு ’ நூல் வெளியீடு
3. ‘ இஸ்லாமும் தமிழும் ’ நூல் வெளியீடு

அதைப் போல உலகத்திலே தமிழர்களுடைய இல்லங்கள் அனைத்திலும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக நூல் ஒன்று இருக்கும். அப்படி இல்லாவிட்டால், நிச்சயமாக அது தமிழருடைய இல்லமாக இருக்காது என்பதை உணர்த்திக் காட்டுகின்ற வகையில் இந்த நூற்பதிப்புக் கழகம், தொடர்ந்து தொய்வின்றித் தமிழுக்குத் தொண்டாற்றி வந்திருக்கிறது.

“சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தையொட்டிப் பல்வேறு அறநிறுவனங்கள் இயங்கிக்கொண்டிருக்கின்றன என்று முத்துக் குமாரசாமி யவர்கள் குறிப்பிட்டார்கள். அறநிறுவனங்கள் இயங்கிக்கொண்டிருக்கலாம், ஆனால் அறங்களுக்கெல்லாம் தலையாய தமிழ் அறத்தை இந்த நிறுவனம் தொடர்ந்து இயக்கிக் கொண்டிருக்கிறது என்பதை அரசின் சார்பிலே எடுத்துச் சொல்லி நான் பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

“பொதுவாக, மக்கள் விரும்புவதை வெளியிடுவதைத்தான் பல்வேறு பதிப்பகங்கள் தங்களுடைய குறிக்கோள்களாகக் கொண்டிருக்கின்றன. அதுதான் வருவாய்க்கு வழி என்று அவை கருதிக்கொண்டிருக்கின்றன. ஆனால், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மக்கள் விரும்புவதையல்ல, மக்கள் எதை விரும்ப வேண்டுமோ அதை வெளியிடும் கழகம் என்பது நாம் எண்ணிப் பார்த்து மகிழ வேண்டிய ஒன்றாகும். தமிழ் புறக்கணிக்கப்பட்ட காலத்தில்,—தமிழறிஞர்கள் மதிக்கப்படாதிருந்த காலத்தில்—தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்ட கழகம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

“வடக்கே இருந்து வந்த வாடையை முதலிலே வேங்கட மலை தடுத்தது; அதற்குப் பிறகு தணிகைமலை தடுத்தது; அதற்குப் பிறகு மறைமலை தடுத்தது என்று சொல்வது உண்டு. அப்படிப்பட்ட மறைமலையடிகளாரின் கருத்துகளை நிலைப்படுத்திக் காட்டிய பெருமை இந்தக் கழகத்திற்கு உண்டு.

“தமிழ் தனித்தியங்க முடியுமென்று கால்டுவெல் சுட்டிக் காட்டினார். அவருக்குப்பின் பரிதிமாற் கலைஞர் அதை வலியுறுத்தினார். ஆனால் மறைமலையடிகள் அதை நடைமுறைப்படுத்திக் காட்டினார்.

“இன்று நாம் சங்க இலக்கியங்களின் பெருமைகளையெல்லாம் பேசுகிறோம் என்றால் அப்படிப்பட்ட இலக்கியங்களைத் தந்து கொண்டிருக்கிற கழகம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். நாங்கள் தமிழ்ப் பகைவர்களோடு போராடுகின்றபோது படைக்

கலன்களை வடித்துத் தருகின்ற உலைக் கூடமாகத் திகழ்கிறது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்பதை நான் தெரியப் படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். நான் டாக்டர் பட்டம் பெற்றதை இங்கே வரவேற்புரையில் குறிப்பிட்டுப் பாராட்டி னார்கள். ஆனால், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் மறை மலையடிகள் நூல்நிலையமும் அதிலேயிருந்து கிடைக்கும் அரிய பனுவல்களுமே என்னுடைய ஆராய்ச்சிகளுக்குப் பயன்பட்டன என்பதை இங்கு நான் எடுத்துக் கூறக் கடமைப்பட்டிருக்கின் றேன். ஒரு டாக்டர் அன்று, ஆயிரக் கணக்கான டாக்டர்களை உருவாக்குகின்ற தங்கச் சுரங்கங்களாகக் கழகமும் மறைமலை யடிகள் நூல்நிலையமும் இலங்குகின்றன.

"திரு. வ. சு. அவர்களின் வரலாற்றை நான் படித்துப் பார்த்தேன். 1938இல் தமிழுக்கு ஆபத்து வருமோ என்றிருந்த நேரத்தில் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் அமைத்துப் போராடிய பெருமகனாராக அவர்கள் விளங்கினார்கள் என்பதை எண்ணிப் பார்க்கின்றபோது நான் அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டி ருக்கின்றேன். அவர்கள் இன்றும் குன்றாத இளமையோடு தமிழுக்குத் தொண்டு புரிகிறார்கள். ஓர் அரசு செய்கின்ற பணியை ஒரு நிறுவனத்தின் வழியாக அவர்கள் செய்து காட்டுகிறார்கள். அவர்களின் இந்த அறப்பணி தொடர்ந்து நடைபெற வேண்டும். அவர்கள் பல்லாண்டு வாழ வேண்டும்."

**இலக்கியப் பணி பாராட்டல் :**

தமிழக அரசு மொழி பெயர்ப்புத் துறை இயக்குநர் முனைவர் **திரு ஔவை நடராசன் அவர்கள்**, கழகத்தின் இலக்கியப் பணியினைப் பாராட்டிப் பேசியகாலை குறிப்பிட்டதாவது:

"கதைகளை வெளியிடுவதும் நாடகங்களை வெளியிடுவதுந் தான் பதிப்பாளர்களுக்குப் பலன் தருமே தவிரச் செந்தமிழ் நூல் களை வெளியிடுவதால் பலன் இராது. ஆனால் செந்தமிழ் நூல் களையே வெளியிட வேண்டும் என்று கருதிய கருத்து இருக் கிறதே, அதற்காகவே கழக ஆட்சியாளர் சுப்பையா பிள்ளை அவர்களைத் தமிழுலகம் வாழ்த்த வேண்டும். புலவர்களுக்குத் தலைமை நிலையமாக விளங்குவது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமாகும். புலவராகவும், புலவர்களை எடைபோடும் தலைமைப் புலவராகவும் திகழும் பெருமை சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரையே சாரும். நூல்களைத் திருத்தி வெளியிட வேண்டும் என்கிற புது நெறியைக் கழக ஆட்சியர் காட்டியிருக்கி றார்கள். சங்க இலக்கியங்களுக்கு மாநாடுகள் நடத்தி அவற்றை

நூல்களாக வெளியிட்டிருக்கிறார்கள். மலர்களை வெளியிடும் போது அவற்றில் ஆய்வுக் கட்டுரைகளையும், சமயக் கட்டுரை களையும், தத்துவக் கட்டுரைகளையும், அறிவியல் கட்டுரைகளையும் இடம்பெறச் செய்திருக்கிறார்கள்.

"மொழிப் பேரறிஞர் பாவாணர் அவர்களை, பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார் அவர்களை, என்தந்தையார் சித்தாந்த கலாநிதி ஔவை. சு. துரைசாமி பிள்ளை அவர்களை, நுண்கலைச் செல்வர் இராகவன் அவர்களை இந்தத் தமிழ் உலகிற்குக் கொணர்ந்து வெளிப்படுத்திய பெருமை நம்முடைய வ. சு. அவர் களையே சாரும்.

"கழகம் பொன் விழாவைப் பொலிவுடன் கண்டது. இன்று மணிவிழாவை மாட்சியுடன் காண்கிறது. இன்னும் பவளவிழா, முத்துவிழா, நூற்றாண்டு விழா முதலியன காண வேண்டும். வ. சு. அவர்கள் பல்லாண்டு காலம் வாழவேண்டும்."

தமிழ்நாடு பதிப்பாளர் சங்கத் தலைவர் **திரு. கண. முத்தையா** அவர்கள், பதிப்பாளர் சங்கத்தின் சார்பில் **கழக ஆட்சியாளருக்குச் சிறப்புச் செய்தல் :**

கழக ஆட்சியர் உயர்திரு. வ. சு. அவர்களுக்குத் திரு கண. முத்தையா அவர்கள் பொன்னாடை போர்த்தி ஆற்றிய உரையில் குறிப்பிட்டதாவது :

" 'சுப்பையா பிள்ளை' என்று பதிப்பாளர்களாகிய நாங்கள் நினைத்தால் அதற்கு எங்களுக்குத் தெரிந்த பொருள் **'உழைப்பு'** **'கடுமையான உழைப்பு'** என்பதுதான். அவர் எந்த நேரமும் ஏதாவது வேலை செய்துகொண்டே இருப்பார். இந்த வயதிலும் அவர்களே 'புருப்களை' (மெய்ப்புகளை) திருத்தியதை நான் பார்த் திருக்கிறேன். அறுபதாண்டுகள் நிறைவு பெறும் கழகத்தின் வயதில் அவர்கள் காலந்தான் பெரும்பகுதி. அவர் தமையனாரால் தோற்றுவிக்கப்பெற்றதானாலும் திரு. சுப்பையா பிள்ளையின் காலத்தில்தான் கழகம் இந்த மகத்தான வளர்ச்சியைக் கண்டிருக் கிறது. அவர்கள் பதிப்புத் துறையில் செய்ததைவிட நூலகத் துறையில் செய்திருக்கும் பணிகள் தமிழ்நாட்டிற்கே பெருமை தரக் கூடியது. மறைமலை அடிகள் நூலகம் அமைந்திராவிட்டால் இன்று தமிழ் ஆராய்ச்சியாளர்கள் நல்ல நூல்களைப் பெறும் வாய்ப்பினையும் வசதிகளையும் பெற்றிருக்கவே முடியாது. அந்த நூலகத்தில் மறைமலையடிகளார் சேர்த்து வைத்திருந்த நூல்கள் மட்டுமின்றிப் பல அரிய—பழைய—அழிந்துபோகக்கூடிய நிலையிலிருந்த நூல்கள் பலவற்றையும் சேர்த்து வைத்திருக்கி

ஞர்கள். அங்குப் பழைய ஏடுகளும் இருக்கின்றன. தமிழ் நாட்டிலே பெருமைப்படக்கூடிய நூலகர் ஒருவர் இருக்கிருர் என்ருல் அவர், திரு பிள்ளை அவர்களின் மருகர் திரு. முத்துக் குமாரசாமி அவர்கள்தாம். தமிழ்—சைவம் இரண்டினும்தான் பிள்ளை அவர்களுக்குப் பற்று அதிகம். அவர்கள் பல்லாண்டு வாழ இறைவனை வேண்டிக் கொள்ளுகிறேன்.''

**பல்துறைப் பணி பாராட்டல் :**

கழகத்தின் பல்துறைப் பணிகளைப் பாராட்டுமுகத்தான் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறைப் **பேராசிரியர் முனைவர் ந. சஞ்சீவி அவர்கள்** ஆற்றிய உரைச் சுருக்கம் :

''திரு. வ. சு. அவர்கள் வரலாற்றைப் பார்த்த எனக்கு, அவர்கள் என்ன காரணத்தினுல் இத் துறையில் புகுந்தார்கள் என்ற எண்ணம் தோன்றியது. அவ் வரலாற்றில், அவர்கள் இலங் கையில் இருந்தபோது, மருத்துவக் கல்லூரியில் சேர முயன்று அந்த வாய்ப்புக் கிட்டாமற் போயிற்று என்று ஒரு குறிப்புக் கிடைத்தது. பல பேருக்கு உடல் நோய்க்கு மருத்துவம் பார்க் கின்ற வாய்ப்புக் கிட்டாமற் போனுலும், தமிழுக்கே மருத்துவம் பார்க்கக் கூடிய வாய்ப்புக் கிடைத்தது போலும்! பலபேருடைய வாழ்க்கையில் இப்படிப் பல நிகழ்ச்சிகள் திருப்பு மையங்களாக அமைகின்றன.

''இன்றைய வரலாற்றில் எத்தனையோ பதிப்பகங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனுல் தொழிலையும் தொண்டையும் ஒன்ருகவே—தன்னுடைய வளத்தையும் நாட்டினுடைய வளத்தை யும் அல்லது மொழியினுடைய வளத்தையும் ஒன்ருக இணைத்து, இரண்டற்கும் ஊறில்லாமல் வெற்றிகரமாகச் செய்திருக்கிற ஒரு தொழில் தலைவன்—பதிப்பகம் உண்டு என்ருல், அது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகந்தான்—திரு. வ. சு. அவர்கள் தாம்.

''தொழிலுக்குத் தொழில், தொண்டுக்குத் தொண்டு என அவர்கள் திட்டமிட்டுச் செயல்பட்டு வந்திருக்கிருர்கள். அதனுல் தான் அவர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்கள். அவர்கள் பலதுறை நூல்களை வெளியிட்டிருக்கிருர்கள். அகராதிகள், அடைவுகள், நாட்டுப்புறப் பாடல்கள், என்று எல்லாவற்றையும் தொலை நோக் குடன் செய்திருக்கிருர்கள்.

''இவை எல்லாவற்றையும்விட, அவர்கள் வெளியிட்டு வரும் இலக்கியத் திங்கள் இதழான **செந்தமிழ்ச் செல்வி** மிக அருமையான

இதழ். அதிலே இலக்கிய—இலக்கண—தத்துவ—அறிவியல் கட்டுரைகள் இடம் பெறுகின்றன. செய்திகளும் குறிப்புகளும் சிறந்த முறையில் இடம் பெறுகின்றன. அதிலே பத்திரிகைத் தொழிலின் (Journalism) திறம் இருக்கிறது. அப்படிப்பட்ட ஓர் இதழை 56 ஆண்டுகளாக நடத்தி வருவது பாராட்டுக்குரியது. கழகம், பல்கலைக் கழகங்கட்கெல்லாம் முன்னோடியாக விளங்குகிறது. இக் கழகம் வாழ்க என வாழ்த்துகிறேன்.''

**கழகத்தின் நூலகப்பணி பாராட்டல்:**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் **ச. வே. சுப்பிரமணியம் அவர்கள்,** கழகத்தின் நூலகப் பணியினைப் பாராட்டு முகத்தான் குறிப்பிட்டதாவது :

''மறைமலையடிகள் நூலகம், கழகத்தால் தோற்றுவிக்கப் பட்டதாயினும், அது தமிழர்களுக்கு மட்டும் உரியதன்று—இந்தியர்களுக்கு மட்டும் உரியதன்று—உலக மக்கள் அனைவருக்குமே உரியதொரு நூலகமாகும் என்ற உணர்வை நம்முடைய கழக நூலகம் ஏற்படுத்தியுள்ளதை அறிந்து நாம் பெரிதும் மகிழ்கின்றோம். ஆராய்ச்சி மாணவர்களை நாங்கள் ஆற்றுப்படுத்துவது நூலகர் திரு. முத்துக்குமாரசாமி அவர்களிடந்தான். ஏனெனில் எங்குமே கிடைக்காத சில நூல்கள் கழகத்தில்தான் இருக்கின்றன.

''செருமானிய நாட்டில் ஓர் ஆண்டில் 63 ஆயிரம் நூல்கள் வெளிவருகின்றன. தமிழ்நாட்டில் 1000 நூல்கள்தாம் வெளிவருகின்றன. கல்கத்தாவிலுள்ள நூலகத்தில் 27 ஆயிரம் நூல்கள் இருக்கின்றன. இலண்டன் நூல்நிலையத்தில் 33 ஆயிரம் நூல்கள் இருப்பதாகக் கூறுகிறார்கள். மறைமலையடிகளார் நூலகத்தில் 37 ஆயிரம் நூல்களுக்குமேல் இருக்கின்றன. இந்நிலையில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தையும் மறைமலை அடிகள் நூலகத்தையும் எண்ணி மகிழ்கின்ற வாய்ப்பில் நானும் பங்கு பெற்றதை எண்ணி மகிழ்கிறேன். அவ் வாய்ப்பினை அளித்தவர்களுக்கு நன்றி.''

**சமயப் பணி பாராட்டல் :**

பைந்தமிழ்ச் செல்வர் **திரு. ச. சிவகுமார் அவர்கள்** கழகத்தின் சமயப் பணியினைப் பாராட்டிப் பேசியதாவது :

''திருவாளர்கள் கா. சு. பிள்ளையும், வ. சு. பிள்ளையும் திருநெல்வேலிச் சீமை நமக்குத் தந்த செல்வங்கள். இதுகாறும்

கழகம் வெளியிட்டுள்ள நூல்களுள் சரிபாதி சமய நூல்களாகும். திரு. பிள்ளை அவர்கள் திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் முதலிய சைவ சமய நூல்களை வெளியிட்டிருக்கிறார்கள். சைவ சித்தாந்த நூல்களில் வரும் வடசொற்களை நல்ல தமிழ்ச் சொற்களாக மாற்றியிருக்கிறார்கள். திரு. ப. இராமநாதபிள்ளை அவர்கள் எழுதிக் கழகம் வெளியிட்ட அஞ்சல்வழிச் சைவசித்தாந்தப் பாடம் ஒரு பயனுள்ள நூல். மேலும் இசைத்தட்டுகள் வாயிலாக அவர்கள் சமயத்தைப் பரப்பும் பணி பலருக்குத் தெரியாது. அம்மை 108 போற்றியைச் சேலம் செயலட்சுமியைக் கொண்டு பாடச்செய்து இசைத்தட்டுகளாக வெளியிட்டுள்ளார்கள். மேலும் இக் கழகத்திற்குச் 'சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்' என்று பெயர் அமைத்திருக்கிறார்களே, அதுவே பாராட்டற்குரியது.''

### ஆட்சிமொழிப் பணி பாராட்டல்

தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் **முனைவர் மா. நன்னன் அவர்கள்** கழகத்தின் ஆட்சிமொழிப் பணியினைப் பாராட்டிப் பேசுகையில்,

''திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் தமக்குப் பிறகு இந்தக் கழகத்தைக் கட்டிக் காத்து மேலும் மேலும் வளர்த்துச்செல்லக் கூடிய திறமைமிக்க திரு முத்துக்குமார சாமி அவர்களை உருவாக்கி யிருப்பது பாராட்டத்தக்கது.

''தமிழினால் எந்த அளவுக்குத் தமது வாழ்க்கையை வளர்த்துக் கொள்ளமுடியுமோ அந்த அளவுக்கு வளர்த்துக்கொண்டவர் கூடத் தமிழிலே பிற மொழிகளைக் கலந்து பேசுவதில் தவறில்லை என்று நினைக்கிறார்கள்—பேசுகிறார்கள்—எழுதுகிறார்கள். நடைமுறையிலே பின்பற்றவும் செய்கிறார்கள்.

''அயல்மொழி கலப்பதில் தவறில்லை என்று யாராவது கருதுவார்களானால், நமக்கு நாட்டு உரிமை எதற்கு? அயலவர்களான ஆங்கிலேயரே ஆட்சியில் இருக்கலாமே! அவர்களை விடவா சிறந்த ஆட்சி நடத்த முடியும்? இன்னமும் நாம் அவர்கள் அமைத்த அரசியல் தேரைத் தானே ஓட்டிக்கொண்டிருக்கிறோம்?

''நம்மிடையே எவ்வளவு குறைகள் இருந்தாலும் நம்மவர் ஆட்சியைத்தானே நாம் விரும்புகிறோம்? அதைப் போலவேதான் ஆட்சிமொழியும். அதனால்தான் தமிழ் ஆட்சிமொழியாக வர

வேண்டும் என்பதற்காகக் கடந்த 25 ஆண்டுகளாக அதற்கென ஒரு துறை ஏற்படுத்தி—அதிகாரிகளை அமர்த்தி—ஏராளமான ஊதியம் கொடுத்து—திட்டம் போட்டுச்—சட்டம் போட்டு ஏராள மான பணத்தைச் செலவு செய்து வருகிறோம். அப்படியிருந்தும் இத் திட்டம் இன்னும் நிறைவேறவில்லை. இன்னமும் ஆங்கிலத் திலேயே கையெழுத்துப் போடும் அதிகாரிகள் இருக்கிறார்கள்! எப்படி இந்த நாடு உருப்படும்? தமிழ்நாட்டிலே—தமிழிலே எழுதுங்கள் என்று சொல்லுவதற்கு ஒரு துறையா?

"தமிழ் வளர்ச்சிப் பணி ஒரு தலையாய பணி. எனவே நாம் செய்யக்கூடியதைச் செய்ய வேண்டும். இதற்காகவே சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஆட்சிச் சொல் அகராதியிலிருந்து கி. இராமலிங்கனார் எழுதிய நூல்களையும், **கழகத் தமிழ்க் கையகராதி, பிழை நீக்கி எழுதும் முறை, வடசொல் தமிழ் அகரவரிசை, மக்கட் பெயர் அகர வரிசை** என்பன போன்ற புத்தகங்களை அலுவலகங்களி லெல்லாம் இருந்தாக வேண்டும் எனச் சொல்லியிருக்கிறோம். ஆகவே, இத் துறையில் தனித்தமிழ் நூல்களை வெளியிட்டு, இன்று மணிவிழாக் காணும் கழகத்தைப் பாராட்டுகிறேன்."

**மொழியியல் பணி பாராட்டல்:**

தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் **முனைவர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள்**, கழகத்தின் மொழியியல் பணிகள் குறித்துப் பேசுகையில்,

"கழகம் வளர்ந்ததற்குச் சிறந்த காரணங்கள் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் வணிகச் சிந்தனையும் அயராத உழைப்புமேயாகும். அவர் நாட்டின் நிலையை நன்கு அறிந்தவர். தமிழ்நாட்டில் மிகப்பெரும் இயக்கமாக வளர்ந்து வருவது தனித் தமிழ் இயக்கம். இந்தத் தனித் தமிழ் இயக்கத்திற்குத் துணை நின்ற பெருமக்களுள் சூரிய நாராயண சாத்திரியார் முதலில் தம் பெயரைப் பரிதிமாற் கலைஞன் என்று மாற்றிக்கொண்டார். அதன் பின்னர்தான் பலர் தம் பெயரை மாற்றிக்கொள்ளத் துவங்கினர். அவ் வகையில்தான் திரு நாராயணசாமி நெடுஞ்செழியனாகவும், இராமையா அன்பழகனாகவும் ஆனார்கள்.

"தமிழ்நாட்டில் மட்டுமன்றி மலையாளம், ஆந்திரம், மகா ராட்டிரம் முதலிய நாடுகளிலும் சமற்கிருதத்திற்கு எதிரான இயக்கங்கள் இருந்த காலமுண்டு. இதுபோல் இந்திய நாடு முழுமையிலும் தாய்மொழிக்கு முதன்மை வேண்டும் என்னும் ஓர் எண்ணம் இருக்கிறது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

தனித்தமிழ் வளர்ப்பதில் பெரும்பங்கு எடுத்து வருகிறது. கால்டு வெல் ஒப்பிலக்கணம், மாணுக்கர்க்குப் பயன்படக் கூடிய வரதராச ஞரின் மொழியாராய்ச்சி நூல்கள் ஆகியவற்றை முதன்முதலில் வெளியிட்ட பெருமை கழகத்திற்கு உண்டு.

''கழகம் மேலும் மொழி இயலுக்கென்று ஒரு கழகம், இலக் கியத்திற் கென்று ஒரு கழகம், சமயத்திற்கென்று ஒரு கழகம் எனப் பல கழகங்களை உருவாக்கி நெடிது வாழ வேண்டுமென வாழ்த்துகிறேன்.''

**''கழக ஆட்சியர் வ. சு.''** வரலாற்று நூலை எழுதிய, **கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்** அவர்கட்கு **மாண்புமிகு அமைச்சர் வீரப்பன்** அவர்கள் பொன்னுடை போர்த்திச் சிறப் பித்தார்கள்.

**கழக இலக்கியச் செம்மல் அவர்களின் ஆசிரியவுரைச் சுருக்கம் :**

''இந்த நூலை 300 பக்க அளவில் எழுத நான் பெரும்பாடு பட்டிருக்கிறேன். அவ்வளவு சுருக்கி எழுதவேண்டிய நிலை ஏற்பட்டது. அவ்வளவு பொருத்தமான வாழ்வு அந்த வாழ்வு; அவர் ஒரு பாட்டையாவாகத் திகழ்ந்திருக்கிருர். இவர்கள் 1800 நூல்களை ஒவ்வொரு மெய்ப்பையும் செவ்வையாகப் பார்த்துப் பார்த்து அவ்வளவு அருமையாகச் செய்திருக்கிருர்கள்.

அவர்கள் இந்த மண்ணுக்காக—இந்த மொழிக்காக—இந்த நாட்டிற்காக—இந்தச் சமயத்திற்காக எண்ணி யெண்ணிப் பார்த்து, நயந்து நயந்து பார்த்துப் பல செல்வத்தை வழங்கி இருக்கிருர்கள்.

அவர்கள் ஓய்வு என்பதை அறிந்ததில்லை. இந்த ஓய்வற்ற வாழ்வு 85 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறது. இன்னும் நூருண்டு வாழ வேண்டும். அந்த வாழ்வின் வரலாற்றினை எழுதியவன் என்ற முறையிலே சொல்லிக் கொள்ளுகிறேன். மறைமலையடிகள் நூலகத்திலுள்ள மிகப் பழைய—அரிய நூல்களைப் போற்றிக் காக்க வேண்டும். அதற்கு அரசினுடைய அரவணைப்பு கட்டாயம் வேண்டும். அதனை அவர்களாகவே செய்ய முடியாது.

ஆகவே, ஊருணி நீர் நிறைந்தது போலப்—பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தது போலத் திகழக் கூடிய மறைமலை யடிகள் நூல்நிலையத்தை நீங்கள் வாழ வைப்பீர்களானுல்—மேலும் மேலும் வளமுறுத்துவீர்களானுல், அந்த நூல்களின் பதிப்புகள் பாதுகாப்புகள், பரவுதல் வருவதற்குத் தாங்கள் ஏற்பாடு செய்வீ

களானல், அஃது ஆட்சியர் அவர்களுடைய வாழ்வை நூறாண்டு களுக்கு வாழ வைக்கும். அதற்கு மேலும் வாழ வைக்கும்.''

அடுத்துச் **சொல்லாய்வுக் கலைச்செல்வர் மு. சதாசிவம்** அவர்கள், தாம் இருபது ஆண்டுகளாகக் கழகத்தோடு தொடர்பு கொண்டிருப் பதையும், ஆட்சியர் அவர்கள் தமக்கு எப்படியெல்லாம் உதவி யுள்ளார்கள் என்பனவற்றையும் எடுத்துக் கூறித் தமக்குச் சிறப்புப் பட்டம் வழங்கப் பெற்றதற்கு நன்றி கூறினர்.

அடுத்துத் **தமிழகக் கோயிற் கலைச் செல்வர்** திரு. தி. இராச மாணிக்கம் அவர்கள், கழக ஆட்சியர் தம்மை எங்ஙனம் எழுத்துத் துறையில் ஈடுபடுத்தினர்கள் என்பவற்றையெல்லாம் நன்கு எடுத்துக்கூறித் தமக்குச் சிறப்புப் பட்டம் வழங்கியமைக்கு நன்றி தெரிவித்தார்.

## நிறைவுவிழா

**வரவேற்புரை :**

**கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்** அவர்கள் நிகழ்த்திய வரவேற்புரையின் சுருக்கம் :

"அறுபத்தோராண்டுகளாகப் பெருமகனர் ஒருவர் அருமை யான செயலைச் செய்து வந்திருக்கிறார். வைரமும் முத்தும் பெற்ற முத்து அது (அவர் தந்தையர் பெயர் வைர முத்து). அந்த முத்து தோற்றுவித்த முத்திற்கு இப்பொழுது மாணிக்க விழா—மணி விழா நடக்கிறது. பொன் விழா முன்னே நடந்திருக்கிறது. அரங்கர்க்குப் பின்னே வந்த இவருக்கு இந்த அரங்கில் குழுமி இருந்து நாமெல்லாம் சேர்ந்து வாழ்த்தெடுக்கின்றோம்—இந்த அமைப்புக்கு வாழ்த்தெடுக்கின்றோம். கழக ஆட்சியர் பல்துறை அறிஞர்களை உருவாக்கியிருக்கின்றார். ஆட்சி மொழிக் காவலராக கீ. இராமலிங்கனர் இருந்தார் என்றால் அதற்கு மூலம் அவர்கள்; சட்ட நூல் வல்லுநராகத் திரு. சண்முக சுப்பிரமணியம் அவர்கள் திகழ்ந்தார்களென்றால் அதற்கு அடிப்படை வித்திட்டவர்கள் அவர்கள் ; சங்க இலக்கியங்களில் புள்ளினம், செடி கொடியினம், விலங்கினம் என்ற நூல்களின் ஆசிரியராக திரு. பி. எல். சாமி அவர்கள் இருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர்கள். இப்படிப்பட்டவர்களுக்கு அரசு அரவணைப்பு இருக்க வேண்டும். ஏனென்றால் கழகம் நாட்டின் செல்வம்.'' என்று கூறி விழாவில் பங்கேற்க வந்திருந்த அமைச்சர்களையும் அறிஞர்களையும் அன்பர் களையும் வருக! வருக! என அன்புடன் வரவேற்றார்.

**"இஸ்லாமும் தமிழும்" நூல் வெளியீடு :**

அதிராம்பட்டினம் காயிதே மொய்தீன் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் மு. அப்துல் கறீம் அவர்கள் எழுதிய 'இஸ்லாமும் தமிழும்' என்ற நூலினைக் கலைமாமணி கவிஞர் கா. மு. ஷெரீப் அவர்கள் வெளியிட்டார்.

**கவிஞர் கா. மு. ஷெரீப் அவர்களின் நூல் வெளியீட்டுரை :**

"இந்திய நாடு சமயங்களின் உறைவிடம். இங்குச் சமயம் தோன்றிய பிறகுதான் உலக முழுவதும் சமயம் தோன்றியிருக்க முடியும். ஏனென்ருல் முதல் மனிதர்கள் தோன்றிய நாடு இது. தமிழனும் தமிழன் சமயமும் தமிழ்ப் பண்பாடும் தோன்றிய பிறகு தான் உலகத்திலே மனிதன் விழித்துப் பார்த்திருக்கிருன் என்பது வரலாறு. ஆகவே இந்தச் சைவசித்தாந்தக் கழகத்தின் சார்பாக 'இஸ்லாமும் தமிழும் என்ற நூலை முதியவனுகிய நான் வெளியிடு வதிலே மகிழ்ச்சியடைகிறேன். சைவசித்தாந்தத்திற்கும் இஸ் லாத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு. இதை நான் தத்துவ ரீதியாகச் சொல்கிறேன். ஆறு பிரிவாக இறைவனைப் பிரித்துப் பேசுவது சைவசமயம். எல்லாவற்றுக்கும் மேலாகப் பிரும்மத்தைப் குறிப்பிடுகிறது. அதைத்தான் நாங்கள் அல்லா என்று குறிப்பிடு கிரேும். அதனுல்தான் அவர்கள் இதை வெளியிடுகிருர்கள். நல்ல காரியத்தைச் செய்திருக்கிருர்கள். நல்லவரைக் கொண்டு செய்திருக்கிருர்கள். கிறித்துவமும் தமிழும், பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும் என்று எல்லா நூல்களையும் வெளியிட்டிருக்கிருர் கள். இன்று இதனையும் வெளியிடுகிருர்கள். எந்தச் சமயத்தின் பேரில் செய்திருந்தாலும் அது தமிழ்ச்சமயத்தின் பேரால் தமிழன் செய்தது தமிழ்நாட்டுக்குச் செய்தது என்கிற பேரிலே சொல்லப் பட்டிருக்கிறது.

'இஸ்லாம் இந் நாட்டில் தோன்றிய வரலாறு இந் நூலில் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. அவ்வாறே இஸ்லாமியந் தழுவிய தமிழர்கள் தமிழ்மொழிக் காற்றியுள்ள தொண்டெல்லாம் சுருக்கமாக இந் நூலில் பேராசிரியர் அப்துல் கறீம் அவர்கள் கொடுத்துள்ளார்கள். அவர்கள் முயற்சியை நான் பாராட்டு கிறேன்."

**பேராசிரியர் மு. அப்துல் கரீம் அவர்களின் உரை :**

"நேற்று மாண்புமிகு அமைச்சர் வீரப்பன் அவர்கள் பேசு கின்றபோது ஓர் அருமையான கருத்தைச் சொன்னுர்கள். பாரதி

மறைந்த ஆண்டும் இந்தக் கழகம் தொடங்கிய ஆண்டும் ஒன்றெனச் சுட்டிக் காட்டினார்கள்.

"தமிழுக்குத் தகுமுயர்வளிக்கும் தலைவனையெண்ணித் தவம் கிடக்கையில் இங்குப் பாரதிப் புலவன் தோன்றினான். அப் பாரதி மறைந்த பிறகு தமிழுக்குத் தகுமுயர்வளிக்கும் கழகத்தை ஆட்சியர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தோற்றுவித்தார்கள். டாக்டர் உ. வே. சா. அவர்களைப் பாராட்டுகிறபோது பாரதி அழகாகச் சொன்னான். 'பொதியமலை பிறந்தமொழி வாழ்வறியும் காலமெலாம் புலவோர் நாவின் வாழ்த்தறிவாய், அவர் நெஞ்சின் துதியறிவாய் இறப்பின்றித் துலங்குவாயே' என்று பாராட்டினான். இந்தப் பாரதியின் பாராட்டு டாக்டர். உ. வே. சா. அவர்கட்குப் பிறகு அவர்கள் தந்த இலக்கியங்களை மட்டுமல்ல, 60 ஆண்டுகளுக்குள்ளே 1750க்கும் மேலான வெளியீடுகளைத் தந்துள்ள கழகத்தின் ஆட்சியாளர் வ. சு. அவர்களுக்குத்தான் பெரிதும் பொருந்தும். நான்காவது தமிழ்ச்சங்கம் என்று இதனைச் சொல்லுக அல்லது ஐந்தாவது தமிழ்ச் சங்கம் என்று இதனைச் சொல்லுக. எத்தனையாவது தமிழ்ச் சங்கம் என்பதில் கருத்து வேறுபடலாம். ஆனால் இன்றைக்கு வாழுகின்ற தமிழ்ச் சங்கம் நிச்சயமாகச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்தான். உலகச் சமயங்களையெல்லாம் தமிழ் தழுவிக்கொண்டிருக்கிறது. அவ்வாறே இஸ்லாத்தையும் தழுவிக்கொண்டு பல்வேறு இலக்கியங்களைத் தோற்றுவித்துள்ளது. இஸ்லாமிய நூல்கள் எவ்வளவு வெளிவந்திருப்பினும் அதன் முறையான முதல் இலக்கிய வரலாற்றைச் சைவசித்தாந்தக் கழகம்தான் கொண்டுவர வேண்டியுள்ளது. அதற்காக இஸ்லாமிய அன்பர்கள் சார்பில் கழக ஆட்சியர் வ. சு. அவர்கட்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

## "எலும்புப் பாதுகாப்பு" நூல் வெளியீடு :

ஈரோடு அரசு மருத்துவமனை எலும்பு மருத்துவ வல்லுநர் டாக்டர் எம். சி. இராசமாணிக்கம் அவர்கள் எழுதிய "எலும்புப் பாதுகாப்பு" என்னும் நூலினைச் சென்னை மருத்துவக் கல்லூரி முன்னாள் முதல்வர் டாக்டர் எம். நடராசன் அவர்கள் வெளியிட்டுப் பேசுகையில், கழகம் அறிவியல் நூல்களைத் தமிழில் வெளியிடுவதைப் பாராட்டியும், டாக்டர் இராச மாணிக்கம் அவர்களின் தமிழ்ப் பற்றினையும், நூல் இயற்றுந் திறத்தினையும் பெரிதும் பாராட்டினார்.

**டாக்டர் எம். சி. இராசமாணிக்கம் அவர்களின் ஆசிரியர் உரை:**

"'எலும்புப் பாதுகாப்பு' என்னும் இந் நூலைப் பொது மக்களும், மாணவர்களும் படித்துப் பயன் அடையும் வண்ணம் என்னறிவுக்கு எட்டிய வரையில் தமிழில் படைத்துத் தமிழ் கூறும் நல்லுலகிற்குப் படைப்பதில் பெருமை கொள்கிறேன். சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் இடைவிடாத தூண்டுதலினால்தான் இந் நூல் வடிவம் பெற்றுள்ளது. திரு. முத்துக்குமாரசாமி அவர்களும் இந் நூல் வெளிவரப் பேருதவி செய்தார்கள். அவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

**கழகப்பணி பாராட்டு:**

**திருவாட்டி சௌந்திரா கைலாசம்** அவர்கள் கழகப்பணியினைப் பாராட்டு முகத்தான் குறிப்பிட்டதாவது:

"ஐயாயிரம் ரூபா எடுத்துக்கொண்டு கழகத்துக்குப் போனால் அத்தனைக்கும் நூல்களை வாங்கிவிட முடியும் என்று பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒரு முறை கூறினார்கள். அந்த அளவுக்கு நூல்களை வைத்திருக்கிற கழகம் இது. எங்கெங்கு அரிய இலக்கியங்கள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் போய்த் தேடித் தேடி நமக்குத் தருகின்ற அரிய கழகம் இது. இன்று நாம் கழகத்திற்கு அரிய மணிவிழாக் கொண்டாடிக்கொண்டிருக் கிறோம். அத்துடன் ஆயிரம் பிறை கண்ட ஐயா அவர் களின் முத்து விழாவையும் கொண்டாடிக்கொண்டிருக் கிறோம். ஐயா அவர்கள் பணம் சேர்ப்பதைக் குறிக்கோளாகக் கொள்ளாமல், மக்களுக்கு எவை தேவையோ அவற்றை வெளி யிட்டு வருபவர்கள். அரசியலுக்கு அப்பால் நின்று அறிவியலுக்கும் அருளியலுக்கும் தொண்டு செய்து வருபவர். அப்படிப்பட்ட ஐயா அவர்களின் வாழ்க்கை மிகச் சிறப்பாக இருப்பதற்குக் காரணராயிருக்கும் அவர்தம் வாழ்க்கைத் துணைவியார் மங்கையர்க் கரசியார் அவர்களை நாம் மிகவும் பாராட்டக் கடமைப்பட்டிருக் கிறோம்."

**பாவலர் முத்துசாமி:**

பாவலர் முத்துசாமி அவர்கள் கழக இலக்கண இலக்கியப் பேழை ஒன்றனை, இலங்கையில் வன்முறையாளர்களால் தீக்கு இரையாக்கப்பட்ட நூலகத்திற்கு நன்கொடையாக வழங்கு முகத்தான் உரையாற்றிப் பேழையினை மாண்புமிகு அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களிடம் வழங்கினர்.

**கழக மணிவிழா மலர் வெளியீடு :**

கழக மணிவிழா மலரினைத் தமிழக நிதி அமைச்சர் **மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள்** வெளியிட, அதனைச் செய்தி—அறநிலையத்துறை அமைச்சர் **மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்** பெற்றுக்கொண்டார்கள் மலரினை வெளியிட்டு அமைச்சர் அவர்கள் பேசுகையில்,

"பெரியாரைப் பற்றிப் பாடிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பெரியார் 'வாய்மைப் போரில் இளைஞர்' என்று குறிப்பிட்டார். பெரியாரவர்கள் தமது 95ஆவது வயதிலும் இளமை உள்ளத்தோடு இருந்தார். வயது என்பது உள்ளத்தைப் பொறுத்தது. அவ் வகையில் திரு. சுப்பையா அவர்கள் தமிழ்மொழிக்குப் பணியாற்றுவதில் இன்றும் இளமையோடிருக்கிறார். அப்படிப்பட்டவரைப் பாராட்டும் இம் மணிவிழா சிறந்து விளங்குகிறது. திருவரங்கம் பிள்ளை ஆக்கம்பெறத் துணையாக இருந்தவர் மறைமலையடிகளாரின் மகளார் நீலாம்பிகை அம்மையார். இந்தக் கழகம் இவ்வளவு சிறந்தோங்கி நிற்பதற்கு அவர்களும் காரணராவார் என்பதால் அவர்களை நாம் பாராட்டுகிறோம், அவர்கள் திருவுருவப் படத்தைத் திறந்து வைப்பதில் மகிழ்ச்சியடைகிறோம்.

"அறுபது ஆண்டுகட்கு முன்பே தமிழ்நூல்களை வெளியிட வேண்டுமென்ற நோக்கத்தின் அடிப்படையில் திட்டமிட்டு இக் கழகத்தைத் தோற்றுவித்து அதனை வளர்ந்தோங்கச் செய்த பெருமை இந்த நூற்பதிப்புக் கழகத்திற்கு உண்டு. விற்பனை ஆகுமா, ஆகாதா? என்று கவலைப்படாமல் துணிந்து சங்க இலக்கியங்களை வெளியிட்டதற்காக நாம் கழகத்தைப் பாராட்ட வேண்டும்.

"எழுத்துப் பிழை இல்லாமல்—இலக்கணப் பிழை இல்லாமல்—கருத்துப் பிழை இல்லாமல் பதிப்பித்த—பதிப்பித்து வருகிற பதிப்பகம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். அதற்காக நாம் அதைப் பாராட்டவேண்டும். தமிழின் தூய்மை கெடாமல் பாதுகாத்த பெருமை கழகத்திற்கு உண்டு. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இல்லாமலிருந்தால் இந்த நூற்றாண்டில் வாழ்ந்த அறிஞர்களின் அறிவுச் செல்வங்களெல்லாம் நமக்குக் கிடைக்காமலே போயிருக்கும். திருவரங்கம் பிள்ளை அன்று என்ன எண்ணினாரோ அதை இன்று வரை கடைப்பிடித்து வருகிறது கழகம். நாட்டில் படிக்கும் பழக்கம் வளர வேண்டும். அது வளர்ந்தால்தான் அறிவு வளரும். அறிவு வளர நல்ல நூல்கள் தேவை. அவ் வகையில் நூல்களை வெளியிட்டுவரும் கழகத்தைப் பாராட்டுகிறேன்" என்று குறிப்பிட்டார்.

———

# மணிவிழா வாழ்த்துகள்

## அளப்பரிய அருந்தொண்டு

சீரிய சமய இலக்கியங்களைச் சிறந்த முறையில் வெளியிட்டு வரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ்நாட்டுக்குச் செய்துவரும் தொண்டு அளப்பரிது. இது குறித்துத் தமிழ்மக்கள் அனைவரும் பெருமை கொள்ள வேண்டும். கழகம் கொண்டாடும் மணிவிழா எல்லா வகையிலும் சிறக்க இறைவனருள் துணைநிற்க வேண்டும் என்னும் எம்முடைய வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

—தவத்திரு சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்,
தருமபுர ஆதீனம்

## பயன் விளையப் பல்லாண்டு வாழ்க!

சைவசித் தாந்த தனிநூற் பதிப்பகம்
தெய்வத் திருவருளால் சீரோங்கி—வையமதில்
பல்லாண்டு வாழ்க பலர்க்கும் பலன்விளைய
எல்லாரும் ஏத்த இனிது.

—திருமுருக கிருபானந்த வாரியார்

## சுப்பையா ஒருவருக்கே சிறப்பு!

[புலவர் திருவையாறு அ. அப்துல் கரீம்]

எங்கெங்கே பழஞ்சுவடி இருக்கும் என்றே
எந்நாளும் படித்தபடி தமிழைக் காக்கச்
சிங்கமென உழைத்தபடி ஊர்ஊ ராகச்
சென்றுசேர்த்த ஓலையெல்லாம் ஒழுங்கு செய்து
சங்கத்து நூல்அனைத்தும் பதிப்பித் திட்ட
சாமிநாத ஐயருக்கு மறுப திப்பு
தங்கத்தால் ஆனதென்றால் அதன் சிறப்பு
தமிழகத்தில் 'சுப்பையா' ஒருவ ருக்கே.

## ஒரு நல்ல எடுத்துக் காட்டு

60 ஆண்டுகளாகத் தமிழ் கூறும் நல்லுலகில் கழகம் ஆற்றிய அரும்பெரும் தொண்டுகள் உலகப் பதிப்பகங்களுக்கே

ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும். நூற்றுக்கணக்கான தமிழ் இலக்கிய மலர்களை வெளியிட்டுத் தமிழன்னையின் தலைநிமிர்ந்த பெருமிதத்துக்கு வழிகோலிய கழகப் பெரும் பணிகளை நினைக்க நினைக்க நெஞ்சத்தில் இன்பத்தேன் பிலிற்றுகிறது.

—புலவர் தணிகை உலகநாதன்,
சென்னை.

## விழாவினிது சிறந்து வாழ்க !

[கவிஞர் திலகம் புலவர் பண்ணை சண்முகம், எம்.ஏ., பி.எட்.,]

தித்திக்கும் செந்தமிழின் மணமும் சைவ
சித்தாந்த நன்னெறியும் பரப்பும் சைவ
சித்தாந்தக் கழகமணி விழாவைக் கண்டு
சிவன்சக்தி கரிமுகத்தோன் முருகன் வாழ்த்த,
எத்திசையும் உள்ளோரும் வந்து சூழ,
இன்னிசையும் வாழ்த்தொலியும் எழுச்சி யூட்ட,
கத்துகடல் 'ஓ'மெனவே முழக்கம் செய்யக்
களிவோடும் விழாவினிது சிறந்து வாழ்க!

மற்றும் முனைவர் சொ. சிங்காரவேலன், மாயூரம்; பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், திருச்சி; வல்லிக் கண்ணன், இராசவல்லிபுரம்; மா. காசி விசுவநாத பிள்ளை, எம் ஏ., திருச்சி; பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், சென்னை; திருமதி ஏ. இராசேசுவரி, சித்தூர், பாலக்காடு; புலவர் ஆ. பழநி, காரைக்குடி; திரு. பெரியசாமி அவர்கள், தமிழ்ச் சங்கம், திருச்சி; திரு. அழகு சுந்தரம் செட்டியார், மதுரை; திரு. சுப்பிரமணியம், இந்திப் பண்டிதர், திருநெல்வேலி; கடலூர் திரு. வி. கந்தையா பிள்ளை அவர்களின் மக்கள் வீரபத்திரன், சண்முகம், இராமலிங்கம், கணேசன் ஆகியோர்.

மேலும் உள்ளூர் வெளியூர் அன்பர்கள் பலர் கழக மணி விழாச் சிறக்கக் கம்பிவழியும், கடிதவழியும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளனர். அவர்கள் அனைவர்க்கும் செந்தமிழ்ச் செல்வியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

## வரலாறு

*பெரியார் வாழ்வு எதுவும் வீணாவதில்லை. உலகின் வரலாறு பெரியார் வாழ்க்கை வரலாறுகளின் கோவையே.*

—கார்லைல்.

# மணிவிழா வாழ்த்துகள்

## அளப்பரிய அருந்தொண்டு

சீரிய சமய இலக்கியங்களைச் சிறந்த முறையில் வெளியிட்டு வரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ்நாட்டுக்குச் செய்துவரும் தொண்டு அளப்பரிது. இது குறித்துத் தமிழ்மக்கள் அனைவரும் பெருமை கொள்ள வேண்டும். கழகம் கொண்டாடும் மணிவிழா எல்லா வகையிலும் சிறக்க இறைவனருள் துணைநிற்க வேண்டும் என்னும் எம்முடைய வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

—தவத்திரு சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்,
தருமபுர ஆதீனம்

## பயன் விளையப் பல்லாண்டு வாழ்க!

சைவசித் தாந்த தனிநூற் பதிப்பகம்
தெய்வத் திருவருளால் சீரோங்கி—வையமதில்
பல்லாண்டு வாழ்க பலர்க்கும் பலன்விளைய
எல்லாரும் ஏத்த இனிது.

—திருமுருக கிருபானந்த வாரியார்

## சுப்பையா ஒருவருக்கே சிறப்பு!

[புலவர் திருவையாறு அ. அப்துல் கரீம்]

எங்கெங்கே பழஞ்சுவடி இருக்கும் என்றே
எந்நாளும் படித்தபடி தமிழைக் காக்கச்
சிங்கமென உழைத்தபடி ஊர்ஊ ராகச்
சென்றுசேர்த்த ஓலையெல்லாம் ஒழுங்கு செய்து
சங்கத்து நூல்அனைத்தும் பதிப்பித் திட்ட
சாமிநாத ஐயருக்கு மறுப திப்பு
தங்கத்தால் ஆனதென்றால் அதன் சிறப்பு
தமிழகத்தில் 'சுப்பையா' ஒருவ ருக்கே.

## ஒரு நல்ல எடுத்துக் காட்டு

60 ஆண்டுகளாகத் தமிழ் கூறும் நல்லுலகில் கழகம் ஆற்றிய அரும்பெரும் தொண்டுகள் உலகப் பதிப்பகங்களுக்கே

ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும். நூற்றுக்கணக்கான தமிழ் இலக்கிய மலர்களை வெளியிட்டுத் தமிழன்னையின் தலைநிமிர்ந்த பெருமிதத்துக்கு வழிகோலிய கழகப் பெரும் பணிகளை நினைக்க நினைக்க நெஞ்சத்தில் இன்பத்தேன் பிலிற்றுகிறது.

—புலவர் தணிகை உலகநாதன்,
சென்னை.

## விழாவினிது சிறந்து வாழ்க !

[கவிஞர் திலகம் புலவர் பண்ணை சண்முகம், எம்.ஏ., பி.எட் ,]

தித்திக்கும் செந்தமிழின் மணமும் சைவ
சித்தாந்த நன்னெறியும் பரப்பும் சைவ
சித்தாந்தக் கழகமணி விழாவைக் கண்டு
சிவன்சக்தி கரிமுகத்தோன் முருகன் வாழ்த்த,
எத்திசையும் உள்ளோரும் வந்து சூழ,
இன்னிசையும் வாழ்த்தொலியும் எழுச்சி யூட்ட,
கத்துகடல் 'ஓ'மெனவே முழக்கம் செய்யக்
கனிவோடும் விழாவினிது சிறந்து வாழ்க!

மற்றும் முனைவர் சொ. சிங்காரவேலன், மாயூரம்; பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், திருச்சி; வல்லிக் கண்ணன், இராசவல்லிபுரம்; மா. காசி விசுவநாத பிள்ளை, எம்.ஏ., திருச்சி; பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், சென்னை; திருமதி ஏ. இராசேசுவரி, சித்தூர், பாலக்காடு; புலவர் ஆ. பழநி, காரைக்குடி; திரு. பெரியசாமி அவர்கள், தமிழ்ச் சங்கம், திருச்சி; திரு. அழகு சுந்தரம் செட்டியார், மதுரை; திரு. சுப்பிரமணியம், இந்திப் பண்டிதர், திருநெல்வேலி; கடலூர் திரு. வி. கந்தையா பிள்ளை அவர்களின் மக்கள் வீரபத்திரன், சண்முகம், இராமலிங்கம், கணேசன் ஆகியோர்.

மேலும் உள்ளூர் வெளியூர் அன்பர்கள் பலர் கழக மணி விழாச் சிறக்கக் கம்பிவழியும், கடிதவழியும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளனர். அவர்கள் அனைவர்க்கும் செந்தமிழ்ச் செல்வியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

## வரலாறு

*பெரியார் வாழ்வு எதுவும் வீணாவதில்லை. உலகின் வரலாறு பெரியார் வாழ்க்கை வரலாறுகளின் கோவையே.*

—கார்லைல்.

# கழக ஆட்சியர் வ. சு. அவர்கட்குத் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" பட்டம்

கழக ஆட்சியர், தாமரைச் செல்வர், வ. சுப்பையா அவர்கட்கு 9-1-'82இல் மதுரை காமராசர் பல்கலைக் கழகம், தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் சார்பில் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் பட்டத்தினை வழங்கிப் பொன்னுடை போர்த்திப் பொற்பதக்கம் அளித்தபோது, கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் ஆற்றிய பாராட்டுரைச் சுருக்கம் :

"மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் தமிழ்ச் செம்மல் பேரவை விழாவினில் தலைமை தாங்குகிற வாய்ப்பினைக் கொடுத்ததற்காக என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். மதுரை காமராசர் பல்கலைக்கழகம் மற்ற பல்கலைக்கழகத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்கும் என எண்ணுகிறேன். இவ் விழாவினில் தமிழுக்குத் தொண்டு செய்த இரு பெருமக்களை இப் பல்கலைக் கழகம் பாராட்டுகின்றது. பெரியவர் சுப்பையா அவர்கள் தங்களது இளமைக் காலம் தொட்டு இன்று வரையிலும் திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினுடைய தலைமைப் பதவியினை ஏற்றுக்கொண்டு கடந்த பல்லாண்டு காலமாக நற்பணி ஆற்றிவருகின்றார். அந்தத் துறையில் அவரைப்போல் தொண்டு செய்தவரை நாம் பார்த்ததில்லை. அவர்களைப் பாராட்டுவது நம்முடைய கடமையாகும். சங்க இலக்கியங்கள், அவை தொடர்பான உரைகள், சொற்பொழிவுகள் நடத்தினர். அதோடு இல்லாமல் தமிழ்மக்களின் வளர்ச்சிக்குரிய நூல்களையும் வெளியிட்டார். வெளிநாட்டவர்களும் படிக்கும் வகையில் ஆங்கில நூல்களையும் நம்நாட்டு மக்கட்குப் பயன்படும் வகையில் ஆங்கில-தமிழ்க் கையகராதியினையும் வெளியிட்டுள்ளார். திருக்குறளை மு. வ. அவர்களின் உரையுடன் வெளியிட்டுத் தமிழ் மக்களுக்கு மிகப் பெரும் உதவியைச் செய்துள்ளார். அதை நாம் தெரியப்படுத்தும் வகையினில்தான் இந்த விழாவினை நடத்துகிறோம். தமிழருக்காக—தமிழுக்காக உழைப்பவர்கள் நல்ல இளமையாகவும் மற்றும் அவர்கள் நூறாண்டுகள் வாழலாம்போலிருக்கிறது; அப்படி இவர்கள் இருக்கிறார்கள். குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவும் இவர்களும் இளைஞர்களுக்கு வழிகாட்டிகளாக இருப்பார்களென நம்புகிறேன்."

கழக ஆட்சியர், வ. சு. அவர்கட்குத்

# "தமிழ்ப் பேரவைச் செம்மல்"

பட்டம் வழங்கப் பெறுதல் (9—1—'82)



கழக ஆட்சியர் அவர்கட்குக் கல்வி அமைச்சர் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" பட்டம் வழங்குதல்



குழந்தைக் கவிஞர் அழ வள்ளியப்பா அவர்கட்குக் கல்வி அமைச்சர் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் வழங்குதல்.

### தமிழக வேளாண்மைத்துறை அமைச்சர்
### மாண்புமிகு டாக்டர் கா. காளிமுத்து அவர்கள் ஆற்றிய
## பாராட்டுரை

புத்தக வாணிகத்தில் ஈடுபட்டுள்ளோர் எத்தனையோ பேர், புத்தக வெளியீடுபவர் எத்தனையோ பேர் தமிழகத்தில் இருக்கிறார்கள். ஆனால் அத்தனை பேருக்கும் கிடைக்காத 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் இவருக்குக் கிடைக்கிறதென்றால், அவர் வெறும் புத்தக வணிகர் மட்டுமல்லர்; அவர் செந்தமிழ்க் காவலராக—செந்தமிழ்ப் புரவலராகத்—தனித்தமிழ் வளர்க்கின்ற சான்றோராக இருப்பவர். இன்னும் சொல்லப்போனால் 1938ஆம் ஆண்டு 'தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தின்' சார்பாக இந்தி ஆதிக்கத்தை எதிர்த்துப் போரிட்டவர்; அதனாலேதான் அவரைத் தமிழகம் சிறப்பிக்கிறது.

வடக்கே இருந்துவந்த வாடையைத் தணிகைமலை தடுத்த தென்றால் வடக்கே இருந்து வந்த மொழி வாடையை எதிர்த்த மலை 'மறைமலை' என்று சொல்லுவதுண்டு. அவர் மறைமலை அடிகளாருடன் தொடர்புகொண்டு தனித்தமிழ்ப் புத்தகங்களை வெளியிட்டார். தனித்தமிழை வளர்க்க அக்காலத்தில் பெரியவர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

இவர் தனித் தமிழை வளர்க்க எவ்வளவு பாடுபட்டிருக்க வேண்டும்? ஆகவே இவர் பாராட்டுக்குரியவர். அவர் முதன் முதலில் மிதிவண்டியில் சென்று புத்தகம் விற்றகாலத்தில் இருந்து இன்று வரை தமிழ்ப்பணியை ஆற்றிக்கொண்டிருக்கிறார்.

நாற்பதிலே தளர்வு என்றும், ஐம்பதிலே அசதி என்றும், அறுபதிலே ஆட்டம் என்றும் எழுபதிலே ஏக்கம் என்றும் எண்பதிலே தூக்கம் என்றும் பழமொழிகள் சொல்வதுண்டு. ஆனால், அப் பழமொழிகளையெல்லாம் தகர்த்துவிட்டு இன்றும் தமிழுக்குத் தொண்டாற்றிக் கொண்டிருக்கின்றார். இதனால் மகிழ்ச்சி அடைகின்றோம்; பாராட்டுகின்றோம். சங்கஇலக்கியத்தை மக்கள் அறிய மாநாடுகளை நடத்திப் புத்தகம் வெளியிட்டுச் சங்க இலக்கியத்தைப் பரவச் செய்திருக்கிறார் திரு. வ. சு. அவர்கள். ஆதலால் அவர் ஆற்றிய அரும்பணியை என்றென்றும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது தமிழகம்.

———

## மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
## டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் ஆற்றிய உரை

"நூலெல்லாம் விளையுமங்கே நூறுயிரக்
கணக்கில்; நூலொவ் வொன்றின்
மேலெல்லாம் அழகுசெய்யும் சுப்பையன்
மிகுதிறமை அதுவு மன்றிக்
காலெல்லாம் சிலம்பொலிக்கத் தமிழரசி
உலகரங்கு காணும் வண்ணம்
தோலெல்லாம் சுளைப்பயன்கொள் புதுப்புதுநூல்
தோற்றுவிப்பான் அந்த மேலோன்"

எனப் பாவேந்தர் பாரதிதாசன் பாடுபுகழ்பெற்ற அம்மேலோன் யாரெனின், அவரே அன்னைத் தமிழ்க்கன்னிக்கு ஆயிரம் நூற்சீர் வரிசை பதிப்பித்த அருமை மகன் எனவும், தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகட்கு உலக நூலகம் கண்ட ஒப்பில் தோன்றல் எனவும், திருவரங்க அண்ணனை மறவாப் பெருமை யிளவல் எனவும், ஊறு செந்தமிழ்க்கு என்றால் இன்றும் செங் குருதி வெங்குருதியாடும் வீரக்கிழவர் எனவும், தமிழ்ச்சுரபி எனத்தகும் கழகத்தைக் கட்டிக் காக்கும் பேராட்சியர் எனவும், பாரதநாடு மதித்த தாமரைத்திரு எனவும், தமிழகம் போற்றிய செந்தமிழ்ச் செல்வர் எனவும் அடுக்கிய பாராட்டுக்கு உரிய பெருமகன் பதிப்பையா எனத்தகும் சுப்பையா அவர்கள். இம்முது தமிழ்த் தொண்டர்க்கு மதுரைத் தமிழ்த் தென்றலும் அசைவில் செழுந்தமிழ் வழக்கும் வீசும் நம் பல்கலைக்கழகம் இன்று 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற விழுமிய பட்டம் வழங்கிப் பொன்னாடை போர்த்திப் பொற்பதக்கம் அளித்துப் பாராட்டித்தழ் வழங்குகின்றது.

நெல்லை வேலியாகக் கொண்ட திருநெல்வேலிக்கண் வாளையங்கெண்டை துள்ளும் பாளையங்கோட்டையில் தந்தை வயிரமுத்துவுக்கு நான்காவது குழந்தையாக 22-9-1897 இல் தோன்றிய சுப்பையன் வயிரவிழா பவளவிழா முத்துவிழா வெல்லாம் கொண்டாடி எண்பத்தைந்தாண்டு இளநடையொடு இவ்வரங்கின்கண் வீற்றிருக்கின்றார். நீண்ட பெரிய இனிய இவ் வாழ்வுக்குக் காரணம் தமிழர் பொய்ப்பினும் தான்பொய்யாத் தமிழுணர்வாகும். குற்றிளம் பருவத்தே தமிழ்ச் சிந்தனை

புகுந்த வ. சு. வுக்கு நிறைமலையன்ன மறைமலையடிகளின் உறவுச் சூழ்லும், அண்ணன் திருவரங்கனர் அமைத்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகமும் வாய்த்தன. எதிர்பார்த்து வந்த கேள்வியெல்லாம் வினாத்தாளில் இருக்கக்கண்ட மாணவனது மகிழ்ச்சிப் பெருக்குப் போல, இவ் வாய்ப்புகள் இளைஞர் வ. சு. வின் தொண்டுக்குப் பேருரமாயின.

செய்தற்கு அரியவற்றையும் செய்தற்கு உரியவற்றையும் ஆற்றிய பதிப்புப் பெரியார் வ. சு; கடல்கோள்களினின்றும் தப்பிச் சாவா வரம் பெற்று வாழும் தொல்காப்பியத்தினை உரைகளொடும் மேலுறைகளொடும் பதிப்பித்தவர்; வறியதமிழினம் இன்றும் மதிக்கத் தெரியாத வளமார் தனிச்சங்கப் பனுவல்களை விற்பனை நோக்காதும் குறியெதிர்ப்பைப் பாராதும் தமிழ் நிற்பனையொன்றே கருதி, அவற்றையெல்லாம் சங்கப் பலகையனைய சங்கப் பேழைப்படுத்திப் பொலிவூட்டியவர். கழகம் வெளியிடா மலரில்லை, கழகம் கொண்டாடா விழாவில்லை, கழகம் இணையாத தமிழியக்கமில்லை, கழகத்தோடு தொடர்பில்லாப் புலவரில்லை, கழகம் பதியாத அடிப்படை நூலில்லை என்னும் அளவிற்குத் தமிழ்ப்புரட்சி செய்தவர் வ. சு; புலவர்க் கெல்லாம் புகலிடமாக விளங்கிய வள்ளல்மனைகள் போல, இன்று தமிழாய் வார்க்கெல்லாம் நுழைவிடமாக விளங்குவது மறைமலை நூலகம். அருட்பெருஞ்சோதி வள்ளலார் முன்பு தங்கிய இந் நூலகத்திற் குள்ளே ஒருமுறை போய்த் திரும்பினாலும் அவருள்ளமெல்லாம் தமிழ்அகம் ஆகாதா?

பெரியவர் வ. சு. தவலரும் பதிப்பாளர்; அதன்மேலும் பெரும்புலவர்தம் முடங்கல்களையும் உருவப் படங்களையும் தொல்பொருள்களையும் தேடிப் பேணும் தொகுப்பாளர்; சொற் பொழிவு என்னும் புத்திலக்கிய வகை கண்டு பரப்பிய கற்பனை யாளர். தமிழன்னையின் குமரித்தனி மேனியில் அயலொலி மொழிப்பருக்கள் தோன்றுவாறு அழகுகாக்கும் மொழிக்காவ லாளர். 1800 பதிப்புகளால் தமிழின் அகல நீள ஆழங்களைப் பெருக்கிய ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தமிழ்நாயனார் வ. சுப்பையா அவர்கட்குத் தமிழ்ப் பேரவைச் செம்மல் என்ற பட்டத்தினை வழங்கியும் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் ஓர் உறுப்பினராக ஏற்றுக்கொண்டும் மதுரை காமராசர் பல்கலைக் கழகம் பாராட்டிச் சிறப்பிக்கின்றது.

## கவிஞருக்குப் பட்டம்

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கட்கு மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் சார்பில் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள், **'தமிழ்ப் பேரவைச் செம்மல்'** என்ற பட்டத்தினை வழங்கிப் பொன்னாடை போர்த்திப் பொற்பதக்கம் அளித்துச் சிறப்பித்த ஞான்று துணைவேந்தர், முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் படித்தளித்த,

## தகுதி உரை

பழங்கோட்டைகள் சூழ்ந்த புதுக்கோட்டைக்கண் இன்தமிழ் வளர்க்கும் இராயவரத்தில் 7—11—1922இல் புகழொடு தோன்றிய வள்ளியப்பர் இயல்பிலே குழந்தை நெஞ்சம் கொண்டவராதலின் அரும்பிய குழந்தையிலக்கியத் துறையில் அடி வைத்தார். தமிழிலக்கிய வரலாற்றில் பாடலாலும், கதையாலும் உரைநடையாலும் குழந்தையிலக்கியம் என்ற புதுத் துறையை நிறுவினர். ஆதலின் அவரே தமிழன்னை பல்லாயிரம் ஆண்டு கருக்கொண்டு தாழாது பொறையுயிர்த்த முதற் குழந்தைக் கவிஞர் ; குழந்தையிலக்கியத் தந்தை.

மலரும் உள்ளம், பாட்டிலே காந்தி கதை, சுதந்திரம் பிறந்த கதை, நேரு தந்த பொம்மை எனவாங்கு பல கவிதை நூல்களும்; பர்மா ரமணி, மணிக்குமணி முதலான பல கதை நூல் களும் ; கதை சொன்னவர் கதை, பெரியோர் வாழ்விலே என்றின்ன வாழ்க்கை வரலாறுகளும் ; எங்கள் கதையைக் கேளுங்கள், நாமிருக்கும் நாடு என்றினைய பொது நூல்களும் வள்ளியப்பாவின் தமிழ்ச் செல்வங்களாகும். இத் தமிழ் நூல்கள் இந்தியப் பிறமொழிகளையும் செல்வமாக்கியுள்ளன. பாலர் மலர், சங்கு, டமாரம், பூஞ்சோலை என்ற குழந்தையிதழ்களை வெளியிட்டவர். குழந்தை எழுத்தாளர்கட்கு என்றே ஒரு தனிச்சங்கம் நிறுவி அதன் தலைவராக இன்றும் பணியாற்றி வருபவர். பாரதி போல வள்ளியப்பாவின் படைப்புக்கள் இந்திய வொருமையினையும் தமிழ்மொழியன்பினையும் பிஞ்சு நெஞ்சங்களில் விதைப்பன. இத்தகு சிறப்புகளால், இவருடைய கவிதைகள் பலவற்றுக்கு இந்தியப் பேரரசின் பரிசுகளும், தமிழக அரசின் பரிசுகளும் பன்முறை கிடைத்துள்ளன.

'பள்ளிச்சிறுவரொடு பண்டிதரும் பாராட்ட' என்று கவிமணி பாடியாங்கு, உவமை, கற்பனை, புதுமை, ஆழம், செறிவு, நயம் முதலான இலக்கிய நாடிகளை ஆராய்ந்து பார்ப்பின், இப் பிள்ளைக் கவி நாமறிந்த கவிஞர் வரிசையிலே எண்ணத்தக்க புள்ளிக் கவியாவர். இந்தியக் குடியரசில் குழந்தையிலக்கியக் களத்து முடிசூடா மன்னராகப் புகழ்பெற்று வரும் தமிழ்க்குரிசில் அழ. வள்ளியப்பா அவர்கட்குத் **தமிழ்ப் பேரவைச் செம்மல்** என்ற பட்டத்தினை வழங்கியும் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் ஓர் உறுப்பினராக ஏற்றுக்கொண்டும் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பாராட்டிச் சிறப்பிக்கின்றது.

———

## "உயிரினும் உயர்ந்தது நல்லொழுக்கே!"

**[வேலூர். ம. நாராயணன். எம். ஏ,]**

"அறத்தினும் உயர்ந்தது அருங்கடனே—தூய
அன்பினும் உயர்ந்தது அருளுணர்வே—நூல்
அறிவினும் உயர்ந்தது உலகியலே—பொன்
அணியினும் உயர்ந்தது புன்னகையே!

உறவினும் உயர்ந்தது உயர்நட்பே—இறை
உணர்வினும் உயர்ந்தது உளத்தெளிவே—நான்
மறையினும் உயர்ந்தது வள்ளுவமே—இற்றை
மரபினும் உயர்ந்தது தொல்மரபே!

துறவினும் உயர்ந்தது இல்லறமே—வாய்ச்
சொல்லினும் உயர்ந்தது செயல்திறனே—கொடைத்
திறத்தினும் உயர்ந்தது தொண்டுளமே—வீண்
செலவினும் உயர்ந்தது சிக்கனமே!

ஒறுப்பினும் உயர்ந்தது நன்னயமே—கடும்
உழைப்பினும் உயர்ந்தது நாணயமே—உடல்
உறுப்பினும் உயர்ந்தது மனநலமே—நம்
உயிரினும் உயர்ந்தது நல்லொழுக்கே!"

## திருப்பனந்தாளில் கழக ஆட்சியர் வ. சு அவர்கட்குப் பாராட்டு

திருப்பனந்தாள் அருணசடை சுவாமிகள் திருக்கோயிலில் *முரளிரவணு கலைக்கூடத்தின் சார்பில் 10-1-'82இல் கழக ஆட்சியர், தாமரைச் செல்வர், செந்தமிழ்ச் செல்வர் தமிழ்ப் பேரவைச் செம்மல் வ. சுப்பையா அவர்களைப் பாராட்டி, முனைவர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் ஆற்றிய உரைச் சுருக்கம் :

திரு. சுப்பையா பிள்ளை அவர்களைப்பற்றிக் கூறவேண்டுமானால் அவர் தமிழ் இலக்கியங்களை வெளியிட்டு அதைப் பரப்புகின்றதற்காகவே அமைந்தார் எனலாம். அவர் மறைமலை அடிகளுடன் தொடர்பு கொண்டு தனித்தமிழ் இயக்கத்திலும், இந்தி எதிர்ப்புப் போராட்டத்திலும் ஈடுபட்டார். இவர் இந்த எண்பத்தைந்து வயதிலும் இளமையாக இருக்கிறார் என்றால் அஃது இவர் தமிழுக்குத் தொண்டு செய்ததால் என்று நிச்சயமாகக் கூறுவேன்.

இந்தியாவிலேயே மறைமலையடிகள் நூல்நிலையம்போல் சிறந்ததொரு நூலகத்தை வேறெங்கும் காண முடியாது. அங்குப் பெரியவர்களுடைய உருவப் படங்களையும் கையெழுத்துகளையும் தொகுத்துப் பாதுகாத்து வருகின்றார்கள். அந்நூலகத்தை இவர்தாம் பாதுகாத்து வருகின்றார்.

### செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் ஆற்றிய உரைச் சுருக்கம்

தமிழ்த் தாத்தா சுப்பையா பிள்ளையைப் பாராட்ட எனக்குக் கொடுத்த வாய்ப்புக்காக என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இங்கே நம்முன் காட்சியளிக்கும் பெரியார் அவர்களைப்பற்றிப் பலர் அறியாதவர்கள். ஆனால் சிலர்

---

* தமிழக அரசு அரசவை இசைக்கலைஞர் பாலமுரளி கிருஷ்ண அவர்களின் பெயரில் அவர்தம் துணைவியார் திருவாட்டி அபயாம்பிகை அம்மையாரால் நிறுவப்பட்டுள்ள இந்த நிறுவனம் தமிழ் அறிஞர்களையும், தமிழுக்குத் தொண்டாற்றிய பெருமக்களையும் பாராட்டிச் சிறப்புச்செய்து வருகின்றது. அவ்வகையில் முதலில் 9-1-'82இல் முனைவர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் படத்தினைத் திறந்து வைத்துப் பாராட்டுவிழா நடத்திற்று. அடுத்து நம் கழக ஆட்சியர் அவர்களைப் பாராட்டிச் சிறப்புச் செய்துள்ளது.

அறிந்தவர்கள். எனக்கு முப்பத்திரண்டு ஆண்டுகளாகத் தெரியும். தமிழகத்திலேயே அருமையான நூற்பதிப்புக்கழகம் என்று ஒன்று இருக்குமேயானால் அது திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஒன்றுதான் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன்.

நமக்குத் தமிழ்ப் புத்தகங்கள் வேண்டுமென்றால் உடனே நமக்குக் கொடுப்பவர்கள் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தான். அவர்கள் எந்தெந்தப் புத்தகமெல்லாம் வெளியிடப்படாமல் சுவடிகளாக இருக்கின்றனவோ, எவை திருத்தம் பெறாமல் வெளியிடப் பெற்றனவோ அவைகளையெல்லாம் கவனித்து வெளியிடுவார். அதற்குப் பிறகுதான் பல்கலைகழகமே இப்படியெல்லாப் புத்தகங்களும் இருக்கின்றன என்று அறிந்து பாடமாக வைத்தார்கள். இது தமிழ்நாட்டிலே தமிழுடன் நன்றாக உறவு கொண்டவர்களுக்கு நிச்சயமாகத் தெரியும். இப்படி அவர் பல அருமையான செயல்களைச் செய்துள்ளார். அவர்கள் சிறந்ததொரு நூல் நிலையத்தை நடத்தி வருகிறார்கள். இந்நூலகம் நமக்குமட்டுமன்றி வெளிநாட்டவர்களுக்கும் உதவும் வகையில் இருக்கிறது. அங்குச் சென்று பார்த்தவர்கள் நூலகத்தையும் அங்கு இருக்கும் நூலகரையும் மறக்கமுடியாது. சங்க இலக்கியங்களையெல்லாம் தொகுத்துச் சங்க இலக்கியப் பேழை என நமக்குக் கொடுத்துள்ளார். அதுபோல் சிறுவர்களுக்கான பேழை இடைக்கால இலக்கியப் பேழையும் வெளியிட்டுட்டுள்ளார். அஃதாவது புத்தகத்தைப் பாதுகாக்கவும் அவர் வழிசெய்துள்ளார். ஆதலால் கழகமென்றால் வ. சு.தாம் என்று உறுதியுடன் கூறுகிறேன்.

### சட்டமன்றப் பேரவைத் தலைவர்

### மாண்புமிகு க இராசாராம் அவர்கள் ஆற்றிய தலைமையுரை

திரு சுப்பையா பிள்ளை அவர்கள் பல புத்தகங்களை வெளியிட்டுள்ளார். அவர் எந்த அமைச்சராக இருந்தாலும் சரி, எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சரி அவர் தமிழுக்குத்தான் தொண்டு செய்வார். அவர் தமிழுக்கென்று தம் வாழ்வையே அர்ப்பணித்துள்ளார். சுப்பையா பிள்ளையினுடைய முயற்சியை நான் எடுத்துக் கூறக் கடமைப்பட்டிருக்கின்றேன். திருக்குறளை மு. வ. அவர்களின் தெளிவுரையுடன் வெளியிட்டு அப்புத்தகத்தை மட்டும் 10 லட்சம் படிகள் விற்றுள்ளார் என்பதைப் பார்க்கும் போது அவர் எவ்வளவு முயற்சி எடுத்திருப்பார் என்று எண்ணிப் பார்க்கவேண்டும். தனித்தமிழ் இயக்கத்தில் இவருக்கு நல்ல

ஈடுபாடுண்டு. பாவாணருடைய நூல்களையெல்லாம் வெளியிட்டு அவர் சிறப்பைப் பெற்றிருக்கிறார். அவர் மாநாடுகளைக் கூட்டினால் தான் நல்ல புதுமையான கருத்துக்கள் வரும் என்று அறிந்து, 1940ஆம் ஆண்டிலேயே கலித்தொகை மாநாடு, குறுந்தொகை மாநாடு, மெய்கண்ட சாத்திர மாநாடு, நற்றிணை, அரசியல் மாநாடு போன்றவற்றைக் கூட்டியுள்ளார். 40 ஆண்டுகளில் அவர் பல மாநாடுகளைக் கூட்டியுள்ளார். 'ஆட்சிமொழி நூல்' என்ற நூலை வெளியிட்டுள்ளதால்தான் 'பேருந்து' என்ற வார்த்தை நமக்குக் கிடைத்தது. ஆகவே நாம் இப் பெரியவரை வாழ்த்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

---

**சங்கே முழங்கு!**

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு
—பாரதிதாசன்.

---

# சித்த மருத்துவத்தில் மூங்கில்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

நான் சென்ற செல்வியிதழில் ''சூல்யானை உண்டபெரு மூங்கில் முளை'' என்ற தலைப்பில் எழுதியிருந்தேன். நான் முன்னர் எழுதிய ''விலங்கின விளக்கம்'' என்ற நூலில் சூலுற்ற பெண் யானை மூங்கில் முளையைத் தின்று கரு வழுவியதைப் பற்றிக் கூறியுள்ளேன். ஆனால் அண்மையில் மூலிகைப் பேரறிஞர், பேராசிரியர் தமிழ்நாடு அரசின் சித்த அறிவியல் மேம்பாட்டுக் குழுவின் செயலர் இரா. குமாரசாமி எழுதிய நூலை என்னிடம் கொடுத்தார். ''திருக்குறள் மூலிகைகள்'' என்ற நூலில் அவர் கூறியிருந்த ஒரு செய்தி வியப்பைத் தந்தது.

விலங்குகளிடம் இருந்து அறிந்த விஞ்ஞானம் என்பதை விளக்கும் வகையில் அவர் கூறியிருப்பது பின்வருமாறு :

''இவ்வாறான விலங்குகளின் அனுபவத்தைச் சூல் கொண்ட யானை ஆனால் நச்சு மிகுந்த மூங்கில் குருத்துக்களைத் தின்று அதனால் சூல் கரைந்து கருப்பிண்டம் கழன்று பலாக்கனியன்ன விழ்ந்ததை நற்றிணைப் பாடல் ஒன்று விளக்குகின்றது. இது புலவர்க்கு ஏற்பட்ட அனுபவம். சங்க இலக்கியத்தில் முதன் முறையாகச் சொல்லப்படும் கருச்சிதைவு மூலிகையான மூங்கில் கொழுந்தின் மருந்தின் தன்மைகளை யானையிடம் இருந்து கற்றுக்கொள்கிறோம். இன்று நவீன மருத்துவம் தன் ஆய்வுகள்மூலம் மூங்கில் கொழுந்தின் மருந்துத் தன்மைகளை யானையிடம் இருந்து கற்றுக்கொள்கிறது. இதனை இன்று நவீன மருத்துவம் தன் ஆய்வுகள் மூலம் மூங்கில் கொழுந்தில் உள்ள HCN அமிலம் கருவழிக்கும் திறனுடையது என்று சொல் கிறது. சித்த மருத்துவப் பாடல்கள் பல்லாண்டுகாலமாக மூங்கில் இலைகளைச் சூதகமுண்டாக்கியதாகப் பேசுகின்றன.''

'மூங்கிலின் முற்றிய முளை சூலுண்ட பெண் யானைக்குக் கருச் சிதைவைத் தரும்' என்று சங்க காலப் புலவன் கூறியதைத் தெரிந்தே பிற்காலத்தில் சித்த மருத்துவத்தில் மூங்கில் கருச் சிதைவுக்குப் பயன்பட்டதாகக் கூறியுள்ளதைக் காணலாம். ஆதலின் சித்த மருத்துவம் இரண்டாயிரம் ஆண்டுக்கு முன்பு சங்க காலத்தில் இருந்து பட்டறிவு வாயிலாக வளர்ந்த ஒரு தனிப்

பட்ட (unique) மருத்துவ முறையாகும். இது நமது உடலுக்கு இயற்கையான மருத்துவ முறையாகும். சித்த மருந்தைச் சாப்பிட்டால் பின் ஏற்படும் தீமை விளைவுகள் 'அல்லோபதிக்கு' மருத்துவம் போன்று இருப்பதில்லை.

இந்திய அரசும் கருச்சிதைவுக்கு இயற்கையான மருந்துகளை (Natural Medicines) ஆராய்ந்து வருகின்றது. செயற்கையான 'அல்லோபதிக்கு' மருந்துகளின் பின்விளைவுகள் தீமைகளைத் தருகின்றன. இந்த இயற்கையான மூலிகை மருத்துவம் பழங்குடி மக்களிடையே பரம்பரையாக வழங்கவும் போற்றவும் படுகின்றது. ஆகவே பழங்குடிகள் பின்பற்றிய இந்த இயற்கைக் கருத்தடை மருத்துவத்தை மைய அரசு அறிவியலாக ஆராய்ந்து வருகின்றது. புதுவை நலவழித் துறைச் செயலராக இருந்ததால் இதைத் தெரிந்துகொண்டேன்.

நான் எழுதிய முதற் கட்டுரைத் தொகுப்பு நூலான 'சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்' என்ற நூலில் குறிஞ்சி என்ற திணைப்பெயர் எப்படி வந்தது என்று ஆராய்ந்து எழுதினேன். பாலைத்திணை என்ற பெயர் வெட்பாலை மரத்தின் பெயரால், பாலுடைய மரத்தின் பெயரால் அமைந்ததுபற்றியும் விளக்கியுள்ளேன். இந்த மரத்தின் காயைப்பற்றி ஒரே ஒரு சங்க நூல் பாடல் கூறிய உவமைச் செய்தியிலிருந்து-அஃதாவது நற்றிணை உவமையிலிருந்து இந்த மரம் வெட்பாலை என்று கருதப்பட்டது எவ்வளவு உண்மையானது என்பதையும்பற்றி விளக்கியிருந்தேன். மருதம் என்ற அழகிய பூமருதை, மணி மருதைச் சென்னைப் பல்கலைக்கழக அகராதி 'ஆற்று மருது' என்று கூறியது தவறு என்பதையும் முதன்முதலில் விளக்கினேன். பேராசிரியர் குமாரசாமி அவர்கள் எழுதிய 'திருக்குறள் மூலிகைகள்' என்ற நூலில் எழுதியதைக் கவனிக்க வேண்டும்: "இவ்வகையில் இம் மரத்தைப்பற்றி இலக்கிய ஆராய்ச்சி செய்து இதுவே சங்க கால மருதம் என்று ஐயம் திரிபற விளக்கிய திரு பி. எல். சாமி அவர்களுக்குத் தமிழ் இலக்கிய உலகம் கடமைப் பட்டுள்ளது" என்று எழுதியுள்ளார். என்னுடைய கருத்துக் கோள்படி சித்த மருத்துவம் என்ற தனித்தமிழ்த் தமிழ் மருத்துவம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் மூலிகைகளைப்பற்றி அறிந்த பட்டறிவால் தோன்றியதென்பதில் ஐயமில்லை. இதற்குச் சான்று மூங்கில் முளையைத் தின்ற யானையின் கருப்பம் வழுவியதைப் பற்றிக் கூறிய நற்றிணைச் செய்தியே போதும்.

———

# பிரமதேசத்துப் பிச்சை உகக்கும் பெம்மான்

[நி. இராசமாணிக்கம், பி ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருட்டிண சாலை, சேலம்-7 ]

கடல் குடித்த குடமுனி வதியும் பொதிகையினைத் தன் அகத்தே கொண்ட அம்பாசமுத்திரத்தினின்றும் ஏறக்குறைய 4 கி. மீ. தொலைவில் பிரமதேசம் என்ற சிற்றூர் உள்ளது. இங்குள்ள கைலாய நாதர் ஆலயம் நெல்லை மாவட்டத்திலுள்ள பெரிய ஆலயங்களில் ஒன்றும். இஃது இரண்டு திருச்சுற்றுகளையும் முகப்பில் ஏழுநிலைக்கோபுரமும் உடையது.

கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், மணிமண்டபம் ஆகியவற்றைக் கொண்டது உட்சுற்று. இங்கு எழுந்தருளி யுள்ள இறைவன் பெயர் கைலாயநாதர் என்பதாம். பொதுவாக 'சப்மாதர்'களுக்கு இருபுறங்களிலும் வீரபத்திரரையும்,கணபதியை யும்தான் அமைப்பது வழக்கம். அதற்கு மாருக இங்கு உள்திருச் சுற்றில் (பிரகாரத்தில்) சப்தமாதர்களுக்கு இருபுறமும், வீரபத்திர ரும், ஞானதட்சிணாமூர்த்தியும் காணப்படுகின்றனர். இங்குத் தனிச் சந்நிதியில் எழுந்தருளியுள்ள இலங்கு எரிஎடுத்தாடும் பெம்மானும் ஆடவல்லான் ஒரே கல்லால் ஆன வடிவம். சுற்றிலும் திருவாசி யும் பக்கத்திற்கு 13 தீப்பிழம்பும் கொண்டுள்ள இந்த வடிவு காண வேண்டிய படைப்பாகும். வெளியே கொடிமரத்திற்கு வடபுறம் மூன்று சங்கிலிகளும் மணியும் ஒரே கல்லில் உருவாக்கப்பட்டுள் ளன. சிற்பியின் கைவண்ணத்திற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

இரண்டாவது திருச்சுற்றின் திருவாதிரை மண்டபம், சோம வார மண்டபம் ஆகியவை உள்ளன. மேலும் கருவறை, அர்த்த மண்டபம், மகாபண்டபம், உட்சுற்று ஆகியவற்றைக் கொண்ட அம்பாள் திருமுன்னும் இங்குதான் உள்ளன. பிரகந்நாயகி என்று அடியார்களால் அன்புடன் அழைக்கப்படும் அன்னையின் அழகு மெய்மறக்க வைக்கிறது. வலக்கையில் நீலோற்பலமலர் காணப் படுகிறது. இடக்கை கத்ய அவலம்பித அஸ்தத்தில் வைக்கப் பட்டுள்ளது.

இரண்டாவது திருச்சுற்றில் கங்காளநாதருக்குத் தனியாக ஒரு திருமுன் உள்ளது. ஆலயங்களில் கங்காளநாதருக்கு ஒரு சிறிய திருமுன்தான் இருக்கும். ஆனல் இங்கு உள்ளதுபோன்று சுற்றுப்புறத் தேவதைகளுடன் கங்காளநாதர் திருமுன் வேறெங்கும் இல்லை என்றே கூறலாம்.

நதிமதிபொதிசடையன் பல்வேறு வடிவங்களில்—அடியாருக்கு அருள் புரிபவனாகவும், அடியார் அல்லல் உற்றபோது அழித்தல்தொழிலை மேற்கொள்பவனாகவும், ஆடவல்லானாகவும், ஆன்மீக நெறியை உணர்த்துபவனாகவும் உருவாக்கப்படுகின்றான். இவற்றில் தென்னகத்திற்குச் சிறப்பாக உரியன கங்காளமூர்த்தியும், பிச்சாடன மூர்த்தியும் ஆம். வடநாட்டில் பைரவர் தாம் அதிகமாகப் பரவப்படுவதாகச் சொல்லப்படுகிறது.

நான்முகனின் ஐந்தாவது தலை தன்னை வைத காரணத்தால் சிவபெருமான் பைரவரைக்கொண்டு அந்தத் தலையைக் கொய்யச் செய்துவிட்டாராம். இதனால் தொடர்ந்த 'பிரமகத்தி' என்ற பாவத்தை அகற்ற அறநூலில் கூறியபடி சிவபெருமான் பிச்சை எடுத்தாராம். இதுதான் கங்காளமூர்த்தி வடிவிற்கான புராணம். தாருகாவனத்து முனிபுங்கவர்களின் அகந்தையை அழிக்கப் பிச்சை எடுத்த வடிவம்தான் பிச்சாடனமூர்த்தி.

கங்காளமூர்த்தியும், பிச்சாடனமூர்த்தியும் பிச்சை உகக்கும் பெம்மான்களே. இருப்பினும் ஆகமவிதிகளின்படி இவற்றின் இடையே சில வேறுபாடுகள் உள்ளனவாகத் திரு. கோபிநாதராவ் "இந்து தெய்வ வடிவங்களின் அடிப்படைகள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். கங்காளநாதர் வடிவில் உள்ள 4 கைகளில் முன்வலக்கை உடுக்கையை அடிக்கக் குச்சி போன்றதையும், முன் இடக்கை உடுக்கையையும், பின் வலக்கை தன் அன்புக்குரிய மாவிற்கு ஏதோ அளிப்பதைப் போன்ற தோற்றத்திலும், பின் இடக்கை கங்காள தண்டத்தையும் (இறந்தவர்களின் கை, கால், எலும்புகளைக் கோத்துவைக்கும் குச்சி) வைத்திருக்க வேண்டும். பிச்சாடனர் வடிவில் முன் இடக்கையில் உடுக்கைக்குப் பதில் மண்டை ஓடும் (கபாலம்) பின்வலக்கையில் உடுக்கையும் இருக்க வேண்டும். பின் இடக்கையில் கங்காள தண்டத்திற்குப் பதில் சூலம் இருக்க வேண்டும். பிச்சாடனருக்குக் கங்காளதண்டம் கிடையாது. மற்றுமொரு வேறுபாடு பிச்சாடனர் ஆடையின்றி நிர்வாணமாக இருக்கவேண்டும்.

இந்த வடிவங்களிலே தம்மை இழந்த திரு அருட்செல்வர்களில் ஒருவரான திருஞானசம்பந்தப்பெருமான்,

"உலந்தவர் என்பதணிந்தே யூரிடு பிச்சையாராகி"

என்றும்,

"பற்றியொரு தலை கையினில் ஏந்திப் பலிதேரும்
பெற்றியதுவாகித் திரி தேவர் பெருமானார்"

என்றும் பிச்சை எடுக்கும் பாங்கினைப் போற்றினால்,

திருநாவுக்கரசரோ,

"பூதங்
கொடுகொட்டி கொட்டிக் குனித்துப்பாட
உள்ளங் கவர்ந்திட்டுப் போவார்"

என்றும்,

"கருத்தழித்து வளை கவர்ந்தார்"

என்றும் தம்மை மறந்து நெக்குருகிப் பாடிப் பரவசப்படுகிறார்.

மண்டபத்தின் நடுவில் பிச்சை உகக்கும் பெம்மானின் வடிவம் 4 கைகளுடன் அமைக்கப்பட்டுள்ளது. ஆகம விதிகளின் படி அவை காணப்படுகின்றன. தலையில் சடைமுடி உள்ளது. இடக்காதில்தோடும் வலக்காதில்குழையும் உள்ளது, இஃது இவன் ஆணொடு பெண்ணாகிய பெம்மான் என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. எட்டுத்திக்குப் பாலர்களில் நிருதி, வருணன் மற்றும் வாயு மேற்புறச்சுவரிலும் குபேரனும், இந்திரனும் பின் சுவரிலும், ஈசானன், அக்னி, யமன் ஆகியோர் கீழ்ப்புறச் சுவரிலும் தத்தம் வாகனங்களுடன் கல்லிலே செதுக்கப்பட்டு அமைக்கப்பட்டுள்ளனர். இந்திரனுக்கும், ஈசானுக்கும் மட்டுமே 4 கைகள் உள்ளன. மூத்த பிள்ளை மேற்புறமும், இளையபிள்ளை கீழ்ப்புறமும், நான்முகன், திருமால் ஆகியோர் பின்புறமும் வாகனங்களுடன் காணப்படுகின்றனர். அண்ணலின் வலக்கண் சூரியன், இடக்கண் சந்திரன் என்பதற்கேற்ப வலப்புறம் சூரியனும் இடப்புறம் சந்திரனும் அமைக்கப்பட்டுள்ளனர். தேவர்களும், முனிபுங்கவர்களும், பூதங்களும் பல்வேறு இன்னிசைக் கருவிகளுடன் இருபுறமும் காணப்படுகின்றனர்.

"உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப் பரிதி
ஒன்றுநூ றாயிரங் கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ"

எனப் போற்றிப் பரவப்படும் இறைவனின் எழிலில் மயங்கிய பெண்கள் எந்த நிலையில் இருந்தனரோ அந்த நிலையில் தம்மையும் உலகையும் மறந்து காட்டப்பட்டுள்ளது இயற்கையாக உள்ளது. ஆகம விதிகளின்படி இங்குக் கபாலத்தைத் தன் தலையில் ஏந்திய குண்டோதரன் அமைக்கப்பட்டு இருக்கவேண்டும்.

அருகில் உள்ள திருவாலீஸ்வரம், மற்றும் மன்னார்கோயில் ஆலயங்களைப் போன்று இந்தக் கோயிலும் இடைக்காலச் சோழர் காலத்தது எனக் கருதப்படுகிறது. எனினும் இன்றைய ஆலய அமைப்பு 15ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனக் கொள்ளப்படுகிறது.

---

## தமிழ்ச் செல்வி!

[புலவர் தி. நா. அறிவுஒளி, எம். ஏ., பி. எட்.]

இருண்ட காலந் தொட்டுத்
தெரிந்த கால மட்டும்
இருப்பவள்—கலை
கூறி வாழ்வை நன்று
தேறிப் பாடுஞ் சுவைச் சிரிப்பவள்!

மருண்ட போதும் பட்டுச்
சுருண்ட போதும் கட்டி
யணைப்பவள்!—அறங்
கூறி முன்னைப் பண்பில்
ஊறி வாழும் அருட் பிணைப்பவள்!

நரம்பை மீட்டும் யாழின்
வரம்பைக் காட்டும் ஏழின்
னிசையினுள்!—பிற
நாட்டை மயக்குமெழிற்
பாட்டை விளைத்த வீர விசையினுள்!

அரும்புபோ லலர்ந்து விருந்துபோல் நிறைந்த
பண்ணினுள்—மொழிக்
கொத்துக் குளேசெழித்த முற்றுஞ் சுவைகொழித்த
சொல்லினுள்!

சொல்லின் அழகைச் சுட்டிக் காட்டுவார்க்கு வியப்
பூற்றினுள்—வரி
வடிவின் அழகுபொங்கி யொழுகு மொழிவடிவும்
போற்றினுள்!

வெல்லும் அணிகலந்து செல்வமரபு கொண்ட
ஏட்டினுள்!—அகப்
பொருள் கொண்டெழுதி யன்பின் புறங்கண்டுமுத வின்பப்
பாட்டினுள்!

தொல்காப் பியத்திறங்கள் பல்காப்பியச் சுவைகள்
சாற்றினுள் !—என்றுந்
தூயநடை பயில்நற் ருயின் கொடை யியல்நன்
காற்றினுள் !

ஒல்காப் புகழ்க்குமரி பல்நாட் டினில்வளர்ந்த
பேற்றினுள்—நாளும்
ஒழுங்கு கொண் டுளத்தை விழுங்கு புலவருளத்
தூற்றினுள் !

படிக்குங் கணக்கிலிரு படிக்குள் ளமைந்த நல்ல
படையினுள்!—காமப்
பாலில் உயர்திணைக்குச் சாலும் அறநிலைசொல்
நடையினுள் !

தொடுக்கும் வண்ணப்பாவில் பழுத்த நெறிதொடுத்த
தொடையினுள்!—பாவில்
துன்னுந் தளையினெடு மன்னும் அசைபயிலுங்
கொடையினுள் !

வடித்த சுவையமுதைத் தொடுத்துச் சுவடிசெய்த
பாட்டினுள் !—இசை
நான்கு யாப்புப்பெற்ற மாண்புத் தாய்மையுற்ற
ஈட்டினுள் !

வெடித்த பகையைவென்று செழித்த தமிழாஞ்செல்வி
பாதமே—வேண்டிப்
போற்றிப் பாடிப் புகழ்ந்தேத்தி யாடினேனெப்
போதுமே !

———

## வானெலிச் சிறுவர் சங்கப் பேரவை

சென்னை வானெலிச் சிறுவர் சங்கப் பேரவையின் 19ஆம் ஆண்டு விழாவும், பாரதி நூற்றாண்டு விழாவும் 24—1—82 அன்று பிற்பகல், சென்னை இராயப்பேட்டை ஸ்ரீவெங்கடேசுவரா மெட்ரிக் மேல்நிலைப் பள்ளிக் கலையரங்கில் சிறப்பாக நடைபெற்றது. தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றச் செயலாளர் நடிகமணி D. V. நாராயணசாமி அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கிப் பாரதி போட்டியில் வெற்றி பெற்ற சிறுவர் சிறுமியர்களுக்குப் பரிசு வழங்கினர்.

# இலக்கியத் துறையில் கடந்த பத்தாண்டுகளாக நடந்த ஆய்வுகளின் மதிப்பீடு*

[முனைவர் இராம. பெரியகருப்பன் (தமிழண்ணல்)]

தமிழ் இலக்கிய ஆய்வு பாத்தி பிடிக்காமல் பயிராகிக்கொண்டிருக்கிறது. தெளிவின்றி வளர்ச்சி பெற்றுக்கொண்டிருக்கிறது. இன்று தமிழில், பிற எத்துறையையும் விட, ஆய்வு செய்வோர் தொகை பெருகிவருகிறது. கல்லூரியில் பணிசெய்யும் பெரும்பான்மையோர்—இளைஞர் அனைவரும் ஆய்வு செய்ய விழைகின்றனர். கல்வி கற்போர் தொகையில், தமிழில் எம். ஏ. பட்டம் பெறுவோர் தொகையே மிகுதி. நேர்முகப் படிப்பில் மட்டுமன்றி அஞ்சல் வழியில் தமிழ் எம். ஏ. க்களும் மிகுதியாக வெளிப்படுகின்றனர். மேனிலைப்பள்ளி இளையர் கல்லூரி போல இயங்குவதால், அங்குப் பணியாற்றுபவர்கட்கும் ஆய்வார்வம் தலையெடுத்துளது. இவ் வெள்ளத்தை மறித்தலோ, பயனின்றி வெறுமைக் கடலிலோடிக் கலக்கவிடுதலோ கூடாது. அணைகட்டிப் பகுத்துவிட்டுப் பாத்திபிடித்து நாடனைத்தும் பயன்கொள்ள வழிசெய்வதே முறையாகும்.

**கதவுகள்—திறந்தன வாய்ப்புக்கள் பெருகின :**

வாய்ப்புள்ள ஒரு சிலர் மட்டுமே பிஎச். டி. பெறப் பதிவு செய்து பட்டம் பெற்றதொரு காலம். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில், முதன்முதலாக டாக்டர் மு. வ. ஏழு ஆண்டு கல்லூரிப் பணிமுடித்த எவரும், மூதறிஞர் குழுவின்கீழ்ப் பதிவுசெய்து, டாக்டர் பட்டத்திற்கு ஆராயலாம் என விதி வகுத்த (1972) நாள் தொட்டு, ஆய்வு ஆர்வலர்கட்குப் பல்கலைக்கழக வாயில்கள் நன்கு திறந்தன. எல்லாப் பல்கலைக் கழகங்களுமே வாய்ப்பைப் பெருக்கின. ஏழு ஆண்டுப்பணி என்பது, 5 ஆண்டு இருந்தாலே போதும் என்றாயிற்று. மேற்பட்டப்படிப்பு உள்ள இடத்திலே மட்டும்தான் என்ற நிலைமாறி, எங்குப் பணியாற்றினுந் தகுதியுண்டென மாறிற்று. எப்போதும் ஓரிடத்துவந்து கற்கவேண்டிய

---

*தஞ்சை தமிழ்ப்பல்கலைக் கழகத்தில், முதுகலைப் பேராசிரியர்களின் கருத்தரங்கு *30--12—1981* அன்று நடைபெற்றபோது, படித்தளிக்கப்பெற்ற கட்டுரை.

நிலை மாறி, இருந்த இடத்தில் இருந்தபடியே அவ்வப்போது கலந்துரையாடிப் பணியிலிருந்தே பலரும் ஆய்வு செய்யலாம் என்ற நிலை உருவாயிற்று.

மேற்பார்வையாளராய் வழிகாட்டிகளாதற்குரிய தகுதிகளும் வரவர நெகிழ்த்தப்பெற்றன. பிஎச். டி. பெற்ற பிறகும் மூன்று ஆண்டுகள் தொடர்ந்து ஆய்வு செய்து வருவோரே, வழிகாட்டும் தகுதியுடையவராவர் என்றநிலை அனைத்தும் இன்று மாறிவிட்டன. இங்ஙனம் ஆய்வாளரும் வழிகாட்டுவோரும் எண்ணிக்கையில் கூடிநிற்கும் நிலையை இன்று காண்கிறோம்.

**தமிழ் இலக்கிய ஆய்வு நிலை—ஒரு குத்து மதிப்பிடு :**

தமிழில் இன்று நடைபெற்ற—நடைபெற்று வருகின்ற ஆய்வுகளைப்பற்றி முழுமையான புள்ளிவிவரம் இன்று கிடைக்க வில்லை. இஃதொரு பெருங்குறையாகும். அங்ஙனம் ஒருவர் புள்ளிவிவரம் எடுக்க முயன்றாலும், யாரும் மனநிறைவு தருமாறு ஒத்துழைப்பதில்லை. இத் துறையில் டாக்டர் தி. முருகரத்தினம், டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், டாக்டர் அன்னிதாமசு போல் வார் முயன்று ஓரளவு புள்ளிவிவரம் தந்துள்ளனர். ஆயினும் அன்னிதாமசின் 'தமிழியல் ஆய்வுகள்' பற்றிய நூல் வெளிவந்த 1977க்குப் பிறகு, இன்றுவரையுள்ள நிலைமை யாராலும் தொகுக்கப்படவில்லை. மேலும் அன்னிதாமசு தம் நூலில் எம்.ஏ. ஆய்வேடுகளையும் பிற ஆய்வுகளையும் ஒருங்கு இணைத்து, அகர வரிசைப்படுத்தியிருப்பது துல்லியமான ஆய்வுக்கு அடிப்படையாக அமையவில்லை. முதுகலைப் பட்டஆய்வேடுகளுக்குத் தனிப் பட்டியல் தந்திருக்க வேண்டும்.

எங்ஙனமாயினும் தமிழாய்வுகளைக் கீழ்வருமாறு பகுத்துக் கூறலாம் :

| | |
|---|---|
| இலக்கியம் | 60% |
| இலக்கணம் | 20% |
| கலைத்துறை | 20% |

இலக்கியத்தில், இன்று ஏற்பட்டுள்ள நிலையும் இவ்வாறு சிந்திக்கத்தக்கது :

| | |
|---|---|
| பண்டை இலக்கிய ஆய்வு | 20% |
| நீதி இலக்கியம் | 5% |
| பக்தி இலக்கியம் | 5% |

| | |
|---|---|
| காப்பியம் | 25% |
| சிற்றிலக்கியம் | 15% |
| இக்கால இலக்கியம் | 29% |
| உரைகள் | 1% |

இவை மட்டும் போதா. இன்றுள்ள நிலையில் ஓரளவு முடிந்தவை பற்றிய விவரமே மேலே தரப்பட்டுள்ளது. இப் புள்ளி விவரம் தொகுக்கும்போது,

முடிந்தவை, செய்பவை, பதிந்தவை,

என முத்திறமாகப் புள்ளிவிவரம் தர வேண்டும். ஆயினும் முழுமையான பட்டியல் ஒன்று மேற்கண்டவாறு உருவாக்கப் பட்டாலன்றி, இன்றைய நிலையை இவ்வகையில் கணக்கிடுதல் இயலாது. இதற்கொருவர் பிஎச். டி. பட்டம் பெறும் வகையில் பதிவு செய்து முழுப்பட்டியலும் கருத்துரையும் நல்குவாராயின் அது மிகப் பயனுடையதாகும்.

**பட்டியல் போதுமா ?**

பட்டியல் மட்டும் போதாது. ஏனெனில் பலர் ஏதோ ஒரு தலைப்பைப் பதிந்து, எதனையோ எழுதிப் பட்டம் பெற்றுள்ள சான்றுகளும் உண்டு. நற்றிணை எனப் பதிந்துவிட்டுத், தமக்கு விருப்பமான சில தலைப்புக்களில் அதில் உள்ள செய்திகளைத் தொகுத்து, விரித்து எழுதிவிட்டால் நற்றிணையை ஆராய்ந்து முடித்ததாக ஆகிவிடுமா? ஆய்வு என்பது ஒருவர் செய்ததைத் திரும்ப ஒருவர் செய்யக்கூடாதே தவிர, ஒரே தலைப்பில்கூட மற்றொருவர் முற்றிலும் புதிய தொன்றைப் படைப்பாரானால் அதை மறுத்தல் ஒல்லுமோ? எனவே தகுதியும் செம்மையும் செறிவும் மேன்மேலும் பேணப்பட வேண்டுமே தவிர, ஏதோ யாவும் ஆராயப்பட்டுவிட்டன எனவும் இனி ஆராயக் களம் இல்லையே எனவும் சிலர் வருந்துவது பொருத்தமற்றது. எனவே ஆய்வுத் தலைப்புக்களோடு ஆய்வுச் சுருக்கம், ஆய்வு முடிபுகள் பற்றிய சுருக்கவுரையும் தேவைப்படுகிறது. இன்று ஒரே தலைப்பைப் பலர் ஆராய்கின்றனர். ஆயினும் பல்வேறு கோணங்களில் ஆராய்வாராயின் அஃது ஏற்றுக்கோடற்குரியதே.

இலக்கியத்தில் ஒரு நூலை **எவ்வெவ் வகையில்** ஆராயலாம்—எந்தெந்தக் **கோணங்களில் பார்க்கலாம்**—எவ்வெவ்வாறு அணுக**லாம்**—எவ்வெக்கொள்கைகளை **ஏற்றிப் பார்க்கலாம்** என்ற அறிவு இன்று யாருக்கும் சிறிதளவேனும் ஏற்படவில்லை. இலக்கிய ஆய்வில்

இன்றுள்ள இவ்விழிநிலையைத்தான் இக் கட்டுரை மிக வன்மை யாகச் சுட்டிக் காட்டுதற்கு முற்படுகிறது.

**பிழைமயமான ஆய்வேடுகள் :**

பட்டினத்தார் பிறவியிலேற்படும் பிழைகளை நினைத்துக் கச்சி ஏகம்பனிடம் கீழ்வருமாறு முறையிட்டார் :

"கல்லாப் பிழையும் கருதாப்
பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப்
பிழையும்நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப்
பிழையும் தொழாப்பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்
வாய்கச்சி ஏகம்பனே!"

இன்று பொதுவாகத் தமிழ் ஆய்வேடுகள் அனைத்திலும் காணப்படும் தட்டச்சுப் பிழை, எழுத்துப்பிழை, சந்திப்பிழை, ஒருமை பன்மை மயக்கம், வாக்கியப்பிழை, இலக்கணப்பிழை, கருத்துப்பிழை போன்றவற்றைப்பற்றி யாரிடம் முறையிடுவ தெனத் தோன்றவில்லை. இறுதி நேரத்தில், கால நீட்டிப்பு வாங்கி, அதுவும் முடிகிற சமயத்தில் ஆய்வாளரும் பாராமல், வழி காட்டியையும் பார்க்கவிடாமல் வெந்ததும் வேகாததுமாக அள்ளி வைத்துவிட்டுப் பரிந்துரைமூலமே பட்டம் பெறும் ஆய்வேடுகள் இன்று கேலிக் கூத்தாகிக்கொண்டு வருகின்றன.

**திரும்பத்திரும்ப ஒரே பாணி, ஒரே அமைப்பு :**

பெரும்பாலான ஆய்வேடுகள் ஒரே பாணியையே பின்பற்றி எழுதப்படுகின்றன. இலக்கணமாயின் அதில் சிக்கல்கள் உள, விளக்கவேண்டிய பகுதிகள் உள, ஐயப்பாடுகள் உள. எனவே அவற்றைத் தீர்க்கும் முகத்தான் ஆய்வேடுகள் முயல் கின்றன. மேலும் மொழியியல் துறையினர் பல்வேறு புதிய கோட்பாடுகளை ஏற்படுத்தியிருப்பதால், அவற்றைப் பின்பற்றி ஆராய்வது தமிழ் இலக்கண ஆய்வாளர்க்கு ஒரு வாய்ப்பாயிற்று. அதிலும் எந்த அளவு நம்மவர் புதுமை கண்டுள்ளனர் என்பது கணிக்கப்பட வேண்டும். பிற தமிழ் ஆய்வுகள் அனைத்திலும் ஒரே மாதிரியான நெறிமுறைப் பாங்கே பின்பற்றப்படுவதைக் காண்கிறோம்.

எடுத்துக்காட்டாக அகநானூற்றை எடுத்துக்கொள்ளும் ஒருவர் அதிலுள்ள உவமைகளைத் தொகுத்தல், பிற அணிகளைத் தொகுத்தல், இயற்கைப் புனைவைத் தொகுத்தல், புறச் செய்திகளைத் தொகுத்தல் என இப் பணிகளையே மேற்கொள்கிறார். இதனால்,

முன்னுரை

சங்க இலக்கியத்தில் அகநானூற்றின் இடம்

அகநானூற்றில் உவமையும் அணியும்

அகநானூற்றில் இயற்கைப் புனைவு

அகநானூறு காட்டும் தமிழர் வரலாறு

ஐந்திணையும் அகநானூறும்

முடிவுரை

இவ்வாறு ஒரு திட்டம் வகுத்தால் தேவையான பக்கங்கள் நிரம்பிவிடும். குறுந்தொகையை எடுக்கும் ஒருவரும் இதனையே பின்பற்றி எழுதுகிறார். அவர் மிக அதிகமாகச் செய்யக்கூடிய ஒரு சிறப்பு உண்டு என்றால், இத் தலைப்புக்களில் அவர் சொல்லளவில் சிறுசிறு மாற்றம் செய்து புதுமை காட்டிவிடுகிறார். அகநானூறு காட்டும் தமிழர் வரலாறு என்பதற்குப் பதிலாக அகநானூறும் பழந்தமிழ் நாட்டு மன்னர்களும் என்றோ, அகநானூறும் பழந்தமிழர் சமுதாயமும் என்றோ மாற்றிவிடுகிறார். இது போலத் தொடர்ந்து சிந்தித்தால் நம் ஆய்வுகள் ஒரு 'கைப் பிடிக்குள்' அடங்கிவிடும் முன்மாதிரியை மட்டுமே உடையன என்பது புலனாகிவிடும். நம் இலக்கிய ஆய்வுகள் தொகுப்புக்கள்—விளக்கங்கள்—விரிவுரைகள்—நயவுரைகள்—பாராட்டுரைகள் என்ற ஐந்து வகைகளில் பெரும்பகுதி அடங்கிவிடுகின்றன. ஐயத் தீர்வுகள், சிக்கல் விடுவிப்புக்கள், புதிய அணுகு முறைகள், சிக்கலுள்ள இடங்களைச் சுட்டிக் கிளப்பி விடுதல், மறுப்பும் எதிர் மறுப்புமான விவாத முறைகள் போல்வன மிக மிகக் குறைவாகவே காணப்படுகின்றன.

**ஆராய்ச்சி நெறி முறைகளும் அணுகு முறைகளும் :**

பொது ஆய்வு நெறிமுறைகள்பற்றிச் சில நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. இலக்கிய ஆய்வில் சிறப்பாகப் பின்பற்றக் கூடிய ஆய்வுநெறிமுறைகளை நம் வழிகாட்டிகளும் தெரிந்து கொள்ளவில்லை ; ஆய்வாளர்களும் அறிந்துகொள்ளவில்லை.

அதுமட்டுமன்று; இவற்றை அறிந்து செயற்பட வேண்டும் என்ற ஆர்வம்தானும் நம்மவர்களிடம் துளியளவும் காணப்படவில்லை. இந் நிலையில் இலக்கியத் துறையில் மட்டும் நூற்றுக்கணக்கானவர் பட்டம் பெற்றுக்கொண்டிருக்கின்றனர். தமிழ் உணர்வைக் கொட்டி, உழைக்காமலே தமிழை வளர்த்துக்கொண்டிருக்கிற தமிழன் பண்பு, அவனுடைய இலக்கிய ஆய்விலும் நீடிக்கிறது.

ஆங்கிலத்தில் 'இலக்கியத்தை அணுகும் ஐந்து நெறி முறைகள்' என ஒரு நூலுண்டு. அதுபோல 'நாவல்களை ஆராயும் ஏழு முறைகள்' என்ற நூலுண்டு. 'சிறுகதைகளை அணுகும் முறைகள்' பற்றிய சிறுநூல் ஒன்றைப் படிக்கும் வாய்ப்பும் நேர்ந்தது. இவ்வாறு எத்தனையோ நூல்கள் அங்கு வெளிவருகின்றன. இவை அனைத்தும் இங்கு அவ்வாறே அமையும் என யான் கூறவில்லை. ஆயினும் நம் மரபுக்கு ஏற்பத் தமிழ் இலக்கியஆய்வு நெறிமுறைகளை நாம் காணுதல் வேண்டும். பத்திமை இலக்கியத்தை எவ்வாறெல்லாம் ஆராயலாம், சிற்றிலக்கியத்தை எவ்வாறு அணுகுவது, கதை இலக்கிய ஆய்வுமுறைகள் யாவை என இவ்வாறு பகுத்துப் பகுத்துத் தனித்தனி நெறி முறைகளை அறிந்து அவற்றை ஏற்றிப் பார்க்குமுகத்தான் இங்கு இலக்கிய ஆய்வுகள் கால்கொள்ள வேண்டும். இன்று ஒப்பிலக்கியம் இலக்கிய ஆய்விற்குத் தரும் நெறிமுறைகள் கணக்கில் அடங்கா. ஒரு மொழியிலக்கியத்தைப் பிறிதொரு மொழி இலக்கியத்தொடு ஒப்பிடுதல் மட்டுமன்றி, ஒரு மொழியிலேயுள்ள வற்றைக்—கலைகளுடன், வாய்மொழி இலக்கியத்துடன், பிறதுறைகளுடன் ஒப்பிடுதலாலும் பல உண்மைகளை வெளிக் கொணரலாம். தமிழில் இதுகாறும் தொடாத துறைகள் எத்தனையோ உள. மூலபாட ஆய்வுகள், வாய்மொழி வரிவடிவ ஒப்பீடுகள், மக்கள் பழக்கவழக்கங்களுடன் இலக்கிய மரபுகளை இணைத்து நோக்குதல், உளவியல் போன்ற பிற துறைகளை நன்கு கற்று அவற்றைத் தமிழ் இலக்கியத்தில் ஆராய்தல் என்றினையன பல எத்தனையோ உளவன்றோ ?

**காப்பிய மாந்தர் படைப்பாய்வு—ஒரு முன்மாதிரி :**

காப்பியம் அல்லது புதினங்களில் மாந்தர்களைப்பற்றிக் குணச்சித்திர அடிப்படையில் எவ்வாறெல்லாம் ஆராயலாம்?

முதற்கண் மாந்தர்களை ஆசிரியரே விளக்குகிறாரா? பிற பாத்திரங்களின் பேச்சினிடையே விளக்கம் பெறச் செய்கிறாரா? அப் பாத்திரத்தின் பேச்சு, செயலை வைத்து அப் பாத்திரத்தின் பண்பை நாம் உணர்ந்துகொள்ளும்படி செய்கிறாரா? என மூன்று கேள்விகளைத் தொகுத்துக்கொண்டு ஆராயலாம் என்பர்.

இரண்டாவதாகப் பாத்திரத்தின் புற அழகை வருணிப்பதில் அக்கறை காட்டுகிறாரா? அகப்பண்பைச் சித்திரிக்க முயல்கின்றாரா? அங்ஙனமாயின் எவ்வெவ்வாறு? என வினவுவர்.

மூன்றாவதாக ஒருவரே ஐந்து புதினங்களை எழுதியிருந்தால் முதலில் தொடங்கும்போது மாந்தர் அறிமுகம் நிகழ்கிறதா? இயற்கைப் புனைவில் தொடங்குகிறதா? முடிக்கும்போது எவ்வாறு முடிக்கப்படுகின்றது? இடையே எத்தனை நிகழ்வுகள் இடம் பெறுகின்றன? கதை விறுவிறுப்பில் கவனம் செல்கிறதா? மாந்தர் புனைவில் அக்கறை விழுகிறதா? என்றெல்லாம் தொடுப்பர்.

மாந்தர் வகைகள் பல படைத்து, அவர்களுள் இவர்கள் எவ் வகையினர்? மாறும் வகையா? நிலைபேற்றுத் திறமா? புனைவில் யாண்டும் மாறுபாடில்லையே?—என்றிவ்வாறு எத்தனையோ வினாக்களை எடுத்துவைத்துக்கொண்டு, அவற்றை ஏற்றிப் பார்க்க வேண்டும். கதை மாந்தர் ஆய்வில் அவர்கள் எத்தனை இடத்தில் வருகின்றனர்? எத்தனை நிகழ்ச்சிகளில் இடம் பெறுகின்றனர்? அவர்களின் பண்பு நலன்கள் யாவை? என்றெல்லாம் ஆராய்கின்றோம். கதைமாந்தர்பற்றிய செய்திகளைத் தொகுத்து விளக்குவதைவிட, அவர்கள் எங்ஙனம் படைக்கப்படுகின்றனர் எனப் படைப்பாக்க நுட்பங்களைக் கண்டறிவதே சிறந்த ஆய்வாக அமையும். இலக்கியத்தின் உள்ளடக்கத்தை ஆய்வதும் ஓரளவு புற நீர்மை பற்றியதே. இலக்கிய உருவாக்கத்தை ஆராய்வதே (Creation of Literature) மிக நுட்பமான ஆய்வாக வளரும். எனவே பாத்திரங்களைப்பற்றிய ஆய்விலும் பாத்திரப் படைப்பாக்க முறைகளைக் கண்டறிவதால் நூலின் திறத்தை நன்கு மதிப்பிடலாம்; ஆசிரியனின் கலைத் திறனை நன்கு கணிக்கலாம். இங்ஙனம் ஒவ்வொரு துறையிலும் நுட்பமான இடங்களை நோக்கி நாம் முன்னேற வேண்டும்.

எடுத்துக்காட்டிற்கு நற்றிணை, குறுந்தொகை போன்ற சங்க நூல்களை எடுத்துக்கொள்வோம். இவை ஒவ்வொன்றும்பற்றி ஏறத்தாழ நான்கு நான்கு ஆய்வேடுகள் இதுகாறும் எழுதப்பட்டுப் பட்டமும் பெற்றுள்ளன. ஆயின் இவைபற்றிய ஆய்வுகள் முற்றுப்பெற்றன என்று பொருளாகாது. பிற துறைகளுடன் இணைத்தும் பிற நூல்களுடன் ஒப்பிட்டும் பிறவாறு இலக்கியக் கொள்கைகளை ஏற்றிப் பார்த்தும் எழுதுவதெனில், இவற்றிற்கே இன்னும் பல ஆய்வுகள் எழுதலாம் என்பது வியோதரும்

இன்றைய இலக்கிய ஆய்வுகளில் போதிய, தனித்தன்மை மிக்க ஆராய்ச்சி நெறிமுறைகள் பின்பற்றப்படவில்லை. அங்ஙனம் பின்பற்றும் ஆர்வம்தானும் யாரிடத்தும் அரும்பவில்லை. அத்தகைய அணுகுமுறைகள்பற்றிய அறிவு ஆய்வாளர்கள் பலரிடத்துக் காணப்படவில்லை; வழிகாட்டிகட்கும் தெரியவில்லை. இந்நிலை மாறினாலன்றித் தமிழ் இலக்கிய ஆய்வுகள் பிறரால் மதிக்கப்படாதொழியும் என்பதுறுதி.

**இரண்டு திட்டங்கள் :**

(1) தமிழ் இலக்கிய, இலக்கண, கலையியல் ஆய்வுகட்கு ஒரு தொகுப்பு வங்கி நிறுவ வேண்டும். M. A., M. Litt., M. phil., Ph. D. பற்றிய ஆய்வுப் பட்டியல்கள் தனித் தனியே தொகுக்கப்பட வேண்டும். இதுவரை நடந்ததும் தொகுத்து, இன்று நடப்பதும் தொகுக்கப்பட்டுப் பதிந்தவையும் அதிற் குறிப்பிடப்பட வேண்டும். இவ் வங்கியில் வந்து, கண்டு ஆய்வாளர் உண்மை நிலை அறியலாம்.

(2) ஆண்டுதோறும் "தமிழ் ஆய்வியல்"—ஆண்டு மலர் வெளியிட வேண்டும். இம் மலரில் அவ்வாண்டு நடைபெற்ற ஆய்வுகள் அனைத்தும் தொகுக்கப்பட்டு—தலைப்பு, பட்டம், ஆய்வாளன், இடம், பதிந்த நாள், பட்டம் பெற்றமை, வெளியிடப்பட்டமை போன்ற குறிப்புக்களுடன் ஆய்வு உட் டலைப்புக்கள்—சுருக்கமும் முடிபுகளும் என்ற சிறு குறிப்புக்களும் தரப்பட வேண்டும்.

இவ்விரண்டு பணிகளும் இன்றையநிலையில் தமிழ்ப்பல்கலைக் கழகத்தால் செய்யப்பெற வேண்டும். இனித் தமிழ்ப் பல்கலைக் கழகம் தமிழ் ஆய்வாளர்களின் பயணத் திருத்தலமாக வேண்டும்.

---

## குழந்தைக் கவிஞருக்குப் பாராட்டு விழா

*மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் பெற்றதைப் பாராட்டு முகத்தான் காரைக்குடி குழந்தை இலக்கியச் சங்கத்தின் சார்பில் 26—1—'82 அன்று காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியில் பாராட்டு விழா நடைபெற்றது. விழாவிற்குத் திருமிகு கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமை தாங்கினார்கள். கவிஞருக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர். அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர். கவிஞரவர்கள் ஏற்புரை கூறியபின் சு. வீரபாண்டியன் நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று.*

# தமிழ்த்தென்றல் திரு. வி. க. நூற்றாண்டு விழா

தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் நூற்றாண்டு விழா 26—8—82இல் துவங்கி, 26—8—83 முடிய ஓராண்டுகாலம் மிகச் சீரும் சிறப்புமாகக் கொண்டாட, சென்னை நக்கீரர் கழகத்தார் முடிவு செய்துள்ளனர். இது பற்றி 9—1—82இல் கூடிய அக் கழகக் கூட்டத்தில் கீழ்க்காணும் செயல்முறைத் திட்டங்கள் வகுக்கப் பெற்றன. அவை வருமாறு :

1. திரு. வி. க. நூற்றாண்டு விழாவினைப் பாரதியார் நூற்றாண்டு விழாவினைப் போல் கொண்டாடத் தமிழக அரசை வேண்டுதல்.

2. திரு. வி. க. வாழ்ந்த இல்லத்தை நினைவுச் சின்னமாக்கல்.

3. திரு. வி. க. வின் நூல்களை அரசுடைமையாக்கி வெளியிடுதல்.

4. திரு. வி. க. வின் முழு உருவச் சிலையை இராயப்பேட்டையில் அமைக்க ஏற்பாடு செய்தல்.

5. திரு. வி. க. வின் நூற்றாண்டினைச் சிறப்பிக்கும் வகையில் "அஞ்சல் தலை" வெளியிட வேண்டுதல்.

6. திரு. வி. க. வின் கடிதங்களையும் முன்னுரைகளையும் தனித் தனி நூலாக வெளியிட வகை செய்தல்.

7. திரு. வி. க. வாழ்க்கையையும் தொண்டினையும் விளக்கும் வகையில் ஆங்கிலத்தில் ஒரு குறிப்பு வெளியிடுதல், சிறந்த பொருட் காட்சி வைத்தல்.

8. சென்னை இராயப்பேட்டை ஒயிட்ஸ் சாலையைத் "திரு. வி. க. சாலை" என வழங்க வேண்டுதல்.

9. நூற்றாண்டு விழா நினைவாகக் கல்லூரி, மேல்நிலைப் பள்ளி களுக்குக் கட்டுரை, பாட்டுப் போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங்குதல்.

10. நூற்றாண்டு விழா நினைவு மலர் ஒன்று சிறப்பான வகையில் வெளிவரவும், தமிழகத்தில் உள்ள எல்லா வகையான நாள், கிழமை இதழ்களை 26—8—82ல் நினைவு இதழ்களாக வெளிவரச் செய்யவும் முயலுதல்.

11. திரு. வி. க. நூற்றாண்டு விழாவினை 26—8—82 முதல் 26—8—83 வரை சிறப்பாகக் கொண்டாடத் தமிழகத்தில் உள்ள பல்வேறு நிறுவனங்களையும் பல்கலைக்கழகங்களையும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுதல்.

12. நூற்றாண்டு விழாக் குழு அமைக்கவும் குழுவிற்குத் தலைமை ஏற்று உதவத் தமிழக முன்னாள் முதல்வர் பெரியவர் திரு மீ. பக்த வத்சலம் அவர்களை வேண்டுதல்.

———

# வள்ளுவர் கோட்டத்தில் திருவள்ளுவர் திருநாள்

திருவள்ளுவர் ஆண்டு 2013 தைத்திங்கள் 2ஆம் நாள் (15—1—82) அன்று சென்னை வள்ளுவர் கோட்டத்தில் தமிழ்நாடு அரசின் சார்பில் திருவள்ளுவர் திருநாள் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

செய்தி—அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள், கழகம் அமைத்திருந்த திருக்குறள் நூற்காட்சியினைத் திறந்து வைத்துத் தொடக்கவுரை ஆற்றினார். கல்வித் துறை ஆணையரின் செயலர் திரு. சி. இராமதாஸ் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்

தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் நடைபெற்ற கருத்தரங்கில், அறிஞர்கள் தமிழண்ணல், ஆறு அழகப்பன், தெ. ஞானசுந்தரம் ஆகியோர் உரையாற்றினர்.

மாலையில், பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார் அவர்கள் தலைமையில் ''மொழி நடை எப்படி அமைதல் வேண்டும்?'' என்னும் பொருள்பற்றிக் கலந்துரையாடல் நடைபெற்றது. அதில், கலைமாமணி நாரண துரைக்கண்ணன், திரு. அகிலன், திரு. வெ. நல்லதம்பி, திரு. நக்கீரன் ஆகியோர் கலந்துகொண்டு உரை நிகழ்த்தினர்.

அடுத்து நடைபெற்ற நிறைவு விழாவிற்குக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் தலைமை தாங்கினார். நிதி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் சிறப்புரை ஆற்றினார்.

**நூலாசிரியர்கட்குப் பரிசு :**

விழாவின் நிறைவுரை ஆற்றுமுகத்தான் தமிழக முதலவர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன அவர்கள், சிறந்த நூல்கள் எழுதிய ஆசிரியர்கட்குப் பரிசுகளும், சான்றிதழ்களும், நூல்களை வெளியிட்ட பதிப்பகத்தார்க்குச் சான்றிதழ்களும் வழங்கிச் சிறப்பித்தார்.

1975இலிருந்து 1980ஆம் ஆண்டு வரை வெளியிடப்பெற்ற நூல்களில் சிறந்த நூல்கட்குப் பரிசு வழங்கும் திட்டத்தின் படி, கவிதை, புதினம், மொழி, இலக்கியம் போன்ற 15 தலைப்புகளின்கீழ் நூல்கள் ஆய்வு செய்யப்பட்டு, முதற் பரிசு, இரண்டாம் பரிசு எனப் பரிசுகளும், பாராட்டு இதழ்களும் வழங்கப்பெற்றன. அங்ஙனம் பரிசு பெற்ற நூலாசிரியருள் 'திருஞானசம்பந்தரின் வரலாற்று ஆய்வுரை' எழுதிய மறை திருநாவுக்கரசு, 'அச்சும் பதிப்பும்' என்ற நூலினை எழுதிய திரு. மா. சு. சம்பந்தன் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவர்கட்கு முதற் பரிசு ரூபா இரண்டாயிரமும் நற்சான்றிதழ்களும் வழங்கப்பெற்றன.

## நூலாசிரியருக்குப் பரிசு



15—1—'82இல் வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற
திருவள்ளுவர் திருநாளில்,
"அச்சும் பதிப்பும்" என்ற நூலினை எழுதிய ஆசிரியர்
திரு. மா. சு. சம்பந்தன் அவர்கட்குத் தமிழக முதல்வர் அவர்கள்
முதற்பரிசாகிய ரூ. 2000/- வழங்கிச் சிறப்பித்தல்

———

## எழுத்துச் சீர்திருத்தத்திற்கு அறிஞர்கள் எதிர்ப்பு

சனவரி 31ஆம் தேதியன்று தஞ்சை நகரில் நடைபெற்ற தமிழ்ப் பட்டதாரிகள் அகடமி கூட்டத்திலே, தமிழ் எழுத்துக்களைச் சீர்திருத்துவதற்கெனத் தமிழரிலே ஒரு சாரார் எடுத்து வரும் முயற்சிகள் கடுமையாகக் கண்டிக்கப்பட்டன. சங்க இலக்கியங்களிலேயே தமிழ் எழுத்து முறை இறுதி வடிவம் பெற்றுவிட்டது என்று இக் கூட்டத்தில் எடுத்துக் காட்டப்பட்டது. ஏற்கெனவே தமிழ் எழுத்துக்கள் போதிய அளவு சீர்திருத்தப்பட்டுவிட்டன என்பதும் நினைவூட்டப்பட்டது. இது சம்பந்தமாக ஒரு தீர்மானமும் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம், டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம், நாகர்கோயில் இந்துக்கல்லூரி முதல்வர் டாக்டர் சி. சுப்பிரமணியம், மதுரை காமராசர் பல்கலைக் கழக துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் ஆகியோர் இக்கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

நன்றி : செங்கோல் 7—2—82

# பேராசிரியர் ஆலால சுந்தரனார்

பேராசிரியர் ஆலால சுந்தரனார் அவர்கள், பூரிப்பாக்கம் வேலு செட்டியார் அவர்கட்கும், இராசம்மாள் அவர்கட்கும் ஆறுவது நற்றவ மகனாராக 1907ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 5ஆம் நாள், சென்னை இலிங்கச் செட்டித் தெருவில் பிறந்தார். முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் படித்துப் பள்ளி இறுதித் தேர்வில் வெற்றிபெற்றார். பின்னர்ப் பச்சையப்பன் கல்லூரியில் அவரது மேற்படிப்புத் தொடர்ந்தது. கல்லூரியில் பயிலும்போது ஆலால சுந்தரனாரும் அறிஞர் அண்ணா அவர்களும் நெருங்கிய நண்பர்களாக இருந்தனர். அந்நாளில் பச்சையப்பன் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் சிறப்புத் தமிழ்ப்பிரிவு இல்லாத காரணத்தால் இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து சிறப்புத் தமிழைப் பாடமாக எடுத்துப் பயின்று 1934இல் வெற்றி பெற்றார்.



கிறித்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றத் தொடங்கிய இவர் 1937இல் கிறித்துவக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகவும், 1951இல் தமிழ்த்துறைத் தலைவராகவும் உயர்ந்தார். 1968இல் ஓய்வு பெற்ற இவர் 1973 வரை அதே கல்லூரியில் இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆராய்ச்சிப் பேராசிரியராகப் பணியாற்றினார். அப் பதவிக் காலம் 1973இல் முற்றுப் பெற்ற போதிலும், ஆராய்ச்சியினை முடிக்காத ஆசிரியர் இருவருக்கு உதவிபுரிய வேண்டும் என்ற காரணத்தால் 1980 வரை ஊதியம் பெறாமல் பெருமைதரு (கௌரவ)ப் பேராசிரியராகப் பணியாற்றினார். இங்ஙனம் 46 ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றிய இப் பேராசிரியர் இடையிடையே வேறு பல துறைகளிலும் பணியாற்றியுள்ளார்.

1946இல் சென்னைப் பல்கலைக் கழகப் பாடத்திட்டக் குழு உறுப்பினராகவும் 1961-63ஆம் ஆண்டுகளில் பல்கலைக் கழக ஆட்சிக் குழு உறுப்பினராகவும், 1970 முதல் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி திருத்தக் குழு உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

இப் பேராசிரியர், கட்டுரைவிருந்து, இயற்றமிழ், தோத்திரப் பாடல்களில் காணும் இலக்கிய நயம், சென்னைக் கந்தகோட்டத் தல வரலாறும் திருவருட் பாடல்களும் என்னும் நூல்களையும் 80 கட்டுரைகளையும், எழுதியுள்ளார்கள். வானொலியிலும் மாநாடுகளிலும் அரிய சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார்.

இவர் இறையன்பில் திளைப்பவர், ஆண்டுதோறும் திருவாதிரையின்போது தில்லை சென்று தில்லைப் பெருமானை வழிபடத் தவறமாட்டார். பழகுதற்கு இனிய பண்பாளர். சை. சி. நூற்பதிப்புக் கழகத்திடமும் அதன் ஆட்சியரிடமும் நெருங்கிய தொடர்பும் பற்றும் கொண்டவர். இங்ஙனம் பல்லாற்றானும் சிறந்த இப் பேராசிரியர் 9—1—82இல் திருவாதிரை நாளன்று தில்லைப் பெருமானைக் கண்டு வணங்கச் சென்றிருந்தபோது திடுமென ஏற்பட்ட மார்படைப்பினால் தில்லைப்பெருமான் திருவடியினைச் சேர்ந்தார் என்பது அவர் தம் வரலாற்றில் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

# செய்திகளும் குறிப்புகளும்

## திருவிளையாடல் புராணத் தொடர் சொற்பொழிவுகள் தொடக்க விழா

சென்னை, பல்லாவரத்தில் சாவடித் தெருவில் அமைந்துள்ள மறைத் திரு. மறைமலையடிகளார் வாழ்ந்த இல்லமாகிய மறைமலையடிகள் கலை மன்றத்தின்கண் திருவிளையாடல் புராணத்தொடர் சொற்பொழிவு களின் தொடக்க விழா 31—1—82 ஞாயிறு மாலை 4 மணியளவில் நடை பெற்றது. சென்னைத் துறைமுகத்தில் உயர் அலுவலராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவரும் சைவ. சமயத்தின்பால் பேரீடுபாடு கொண்டவரு மான சைவப்பிரசங்கமணி ஏ. டி. ஏ. ஈஸ்வர் அவர்கள் இத் தொடர் சொற்பொழிவுகளை நிகழ்த்துகிறார்கள்.

தொடக்க விழாவிற்கு அருட்டிரு சே. ரே. தேமொழியார் அவர்கள் தலைமை தாங்கிச் சைவ சமயத்தின் அருமை பெருமைகளையும் சைவப் புராணங்களின் சிறப்புக்களையும் எடுத்துக் கூறினார்கள். திரு. ஈஸ்வர் அவர்கள் திருவிளையாடல் புராணத்தின் வரலாற்று, இலக்கிய. சமயப் பெருமைகளை எடுத்துக் கூறித் தொடர்சொற்பொழிவுகளைத் தொடங் கினார். கழகப் பொதுமேலாளர் திரு. இரா. முத்துக்குமாரசாமி வரவேற்புரை நிகழ்த்தினார். கழக ஆட்சியர் தாமரைச்செல்வர் வ. சுப்பையா பிள்ளை உள்ளிட்ட பெருமக்கள் பலர் விழாவிற்கு வருகை தந்து சிறப்பித்தனர். விழாத் தொடக்கத்தில் திரு. விசாக நம்பி அவர் களின் தேவார இசைநிகழ்ச்சி நடைபெற்றது.

ஒவ்வொரு ஞாயிறும் மாலை 4 மணிக்கு இத் தொடர் சொற் பொழிவுகள் கலைமன்றத்தின்கண் தொடர்ந்து நடைபெறும். சைவப் பெருமக்கள் திரண்டு வந்திருந்து பயன் பெறுவார்களாக.

## உமா மகேசுவரனார் நூற்றாண்டு விழா நினைவுக் கட்டிடக் கால்கோள் விழா

கரந்தைத் தமிழ்ச் சங்கப் புரவலராயிருந்து, தமிழுக்கு அருந் தொண்டாற்றிய தமிழவேள் த. வே. உமா மகேசுவரனார் நூற்றாண்டு விழா நினைவுக்கட்டிடக் கால்கோள் விழா 7—2—82 மாலை, கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெருமன்றத்தில், வழக்கறிஞர் ஆர். கண்ணுச்சாமி அவர்கள் தலைமையிலும், நா. சுந்தரராச நாட்டார் அவர்கள் முன்னிலை யிலும் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் ச. மெய்கண்ட தேவன், இ. ஆ. ப. அவர்கள் அடிக்கல்லை நாட்டினர்.

## கவிஞர் இளந்தேவன் அவர்கட்குப் பாராட்டு

தமிழக அரசின் பரிசு பெற்ற கவிஞர் இளந்தேவன் அவர்களுக்குப் பாராட்டு விழாவும் கண்ணதாசன் சிறப்பு மலர் வெளியீடும் 1—2—82இல் சென்னை மைய நூலகக் கட்டிடத்தில் நடைபெற்றது. அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## வாரியாரின் "செஞ்சொல் உரைக் கோவை" நூல் வெளியீட்டு விழா

மலேசியா, சிங்கப்பூர் முதலிய இலங்கை நாடுகளுக்குச் சென்று சைவமும் தமிழும் தழைக்கச் சொற்பொழிவாற்றித் திரும்பிய திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கட்கு வரவேற்பும், அவர் ஆற்றிய விரிவுரைகளின் தொகுப்பாகிய "செஞ்சொல் உரைக் கோவை" நூல் வெளியீடும் 14—1—'82 அன்று மயிலை ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகன்னாதன், எம். ஏ விழாவிற்குத் தலைமை தாங்கினர். முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் 'செஞ்சொல் உரைக் கோவை' நூலின் முதற்படியினை வெளியிட அதனை நல்லி குப்புசாமி செட்டியார் அவர்களும் இரண்டாவது படியினை வி. பி. எம். அமிர்தலிங்கம் அவர்களும் பெற்றுக்கொண்டனர். அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர். திருமுருக கிருபானந்த வாரியார் ஏற்புரை வழங்கினர். திரு. கோ. சண்முகம், பி. காம். நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## நக்கீரர் கழகம் நடத்திய தமிழ்த் திருநாள் :

18—1—'82 அன்று, சென்னைப் பவழக்காரத் தெருவிலுள்ள ஏ. ஆர். சி. மகளிர் பள்ளியில் நக்கீரர் கழகத்தின் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பில், பேராசிரியர், முனைவர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் தலைமையில் தமிழ்த் திருநாள் கொண்டாடப் பெற்றது. திரு. வி. க.வின் தமிழ்ப்பணி என்னும் பொருள்பற்றி முனைவர் தெ. ஞான சுந்தரம் உரையாற்றினர். முனைவர் பட்டம் பெற்ற அரு. சங்கர லிங்கம் அவர்கட்குப் பாராட்டுரை வழங்கப்பெற்றது.

## ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றத்தில் சங்க இலக்கிய விழா :

26—1—1982, குடியரசுத் திருநாளை, ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தினர் 'சங்க இலக்கிய விழா'வாகக் கொண்டாடினர். முனைவர் ஔவை நடராசன் வரவேற்புரையாற்றினர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறைத் தலைவர், முனைவர் பேராசிரியர் ந. சஞ்சீவி, விழாவைத் தொடங்கி வைத்துப் 'புறநானூற்றின் பெருமைகள்' குறித்து அரியதோர் உரையாற்றினர். உரைவேந்தர் ஔவை துரைசாமி அவர்களின் திருவுருவப் படத்தைச் சட்டத் தமிழறிஞர் திரு. மா. சண்முக சுப்பிரமணியம் திறந்து வைத்தார்.

தென்னக இரயில்வே இணைத் தலைமை மேலாளர் திரு. அ. வெ. சுப்பிரமணியம், மகாகவி ச. கு. ஆதித்தர், ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனர், பேராசிரியர் முனைவர் ந. சுப்பு ரெட்டியார் ஆகியோர் சங்க இலக்கியத்தின் மாண்புகள் குறித்து உரையாற்றினர். பட்டிமன்றச் செயலர் திரு. கெ. பக்தவத்சலம் நன்றி நவில விழா இனிது முடிந்தது. விழாவில் 'சங்க இலக்கியப் பேழை'யும், பிற நூல்களும் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை
(செல்வி சிலம்பு-௫௬, ௨௩௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. சுசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | சீனி. விசுவநாதன், சென்னை-35. | 30—00 |
| ,, | முனைவர் மா. நன்னன், எம். ஏ., பி. எச்டி. (தந்தையார் அவர்கள் நினைவு—நன்கொடை) | 25—00 |
| திருமதி | லலிதா, எம். ஏ., எம். பில்., சென்னை-1. | 10—00 |
| ,, | எஸ். பி. இராணி, சென்னை-4. | 10—00 |
| ,, | இரா. மஞ்சுளா. எம். ஏ. எம். பில். சென்னைப் பல்கலைக்கழகம் | 10—00 |

———

# மதிப்புரை

### பெரியார் காவியம்

[இயற்றியோர்: புலவர் பா. நாராயணன், 34, இராசாசி குடியிருப்பு, ஆத்தூர், சேலம் மாவட்டம்-636102. பக்கம் 132. விலை ரூ. 10. 00]

பெரியார்மேல் பெரும்பற்றும், அப் பற்றின் வழிவந்த ஊற்றமும் மிக்க பெரும் புலவர் நாராயணன். அவர்தம் ஆர்வப்பெருக் காக்க விளைவே 'பெரியார் காவிய'மாகப் பெருக் கெடுத்துள்ளது.

'பெரியார் பெருங்காவியப் பொருளாவார்' என்பதைக் குறிக் கொண்டு போற்றும் ஆசிரியர், அதற்கு ஏற்ப 'இளமைக் காண்டம்' என்னும் ஈதொன்றனை மட்டும் ஒன்பது படலங்களாய் 605 பாடல் களால் யாத்துளார். அதனையும், அன்பர்கள் கருத்துகளுக்கு ஏற்பச் சுருக்கியுள்ளதையும் முன்னுரைக்கண் சுட்டுகிறார். அடுத்துத் திருமணக் காண்டம், விடுதலைக் காண்டம், தன்மானக் காண்டம், திராவிடக் காண்டம் என்பனவும் பாடி முடித்துள்ளமையையும், மேலும் ஓரிரு காண்டங்களில் காவியத்தை நிறைவிக்கக் கருதியுள்ளமையையும் குறிக்கிறார். பெரியாருக்குத் தக்க பெருமைசால் நினைவுச் சின்னம் இக் காவியம் எனல் தகும்.

மரபுநெறி பிறழாத மாத்தமிழ் மண்டிலக் (விருத்தக்) கவிகளால் யாத்துள்ளார் இக் காவியப் பாவலர். 'தனித் தமிழே தமிழ்' என நுனித்துணர்ந்த திறத்தால் இனிக்கப் பாடியுள்ளார்.

பெரியாரைப் பெற்றெடுத்த பேறுவாய்த்த பெருமக்களுக்கு இந் நூலைப் படைப்பலாக்கியுள்ள ஆசிரியர், பெரியார் இயக்கப் பொதுச் செயலாளர் திரு. கி. வீரமணி அவர்களின் முன்னுரை பெற்றுத் தொடர்புறுத்துகிறார். பதின்மூன்றும் ஆழ்வாரெனத் தாம் போற்றும் தம் ஆசிரியர் ந. சுப்பராயப்பிள்ளையைப் போற்றுகிறார்.

ஆசிரியர் தம் தமிழ்ப் பேரன்பு, வாழ்த்துப் படலத்தில் வயங்கு கின்றது. இவர்தம் பன்னூற் பயிற்சி ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம் என்பவற்றில் பொலிகின்றது. இப் படலங்கள் மட்டும் 311 பாடல்களால் இயல்கின்றன. இராம காவியத்தினும், இராமசாமி காவியம் பாடல் தொகையால் விஞ்சியிருத்தல் வேண்டுமென ஆசிரியர் உட்கொண்டார் போலும்!

தமிழாய்ந்த அறிஞன், தன் மாணவர்க்குக் கருத்துகளைப் பொழி வதுபோல் மழை பொழிகின்றதாம் (12) பெற்ற பொருளால் மேலவர் சுற்ற மோம்புதல்போல் அருவி பாய்கின்றதாம் (19) வெள்ளப் பெருக்கால், "உழுவையினத்து ஒண்முதுகில் உழையினங்கள் காலூன்றி ஒடுங்கி வீழ்"கின்றனவாம் (25) மேட்டைப் பள்ளமும் பள்ளத்தை மேடுமாக்கி நிலைப்படுத்தும் வெள்ளப் பெருக்கு, "எடுத் தியா வகை கிடந்த ஏழையர்தம் பெருஞ்செல்வம் ஏழையோர்பால், விடுத்தியா வெறுக்கையெலாம் பொதுவாக்கி மகிழ்கின்ற விறலோர் மானு"மாம் (67) இவை ஆற்றுப் படலத்து மின்னுவன.

நாவல் மரத்தால் பெயர் பெற்றது நாவலந் தீவு என்பதைக் கவிஞர் புரட்சி, "நாவலர் மேவலின் நாவல் நாடென" நாட்டுகின்றது (2) தொட்டாற் சுருங்கிக்குத் தொட்டாற் சிணுங்கி என்னும் பெய ருண்மை விளங்க, "ஏற்போரை எள்ளினர்போல் இலைவாடிச் சிணுங் கிடுமாற் சிணுங்கி" என்னுமொரு பாடல் (25) புலவிக்கண் மகளிர்க்குப் பணியும் ஆடவரை வியந்து நாணி 'வாவலினுந் தலை கீழாய்த் தொங்கிடுதலைத்' தற்குறிப்பேற்ற நயத்தில் கூறுமொரு பாடல் (40) உழவர் வன்களை போக்குதலைத் 'தீத்திறன் மாய்க்கும் திண்பெரியார்க்' கொப்பவும் (68) 'மாத்தமிழ் காக்கும் மறைமலைக்' கொப்பவும் (69) காட்டுகின்றன இரு பாடல்கள். இவை நாட்டுப் படலம் சார்ந்தன.

பெரியார் பிறப்பு, தத்துச் சென்றது, பள்ளி சென்றது, வாணிகம் புரிந்தது இன்னவற்றை இளமைக் காண்டம் விரித்துரைக்கின்றது. ஆற்றொழுக்காகப் பாடல் செல்வதும், அருந்தமிழ் வைப்பாக இருப் பதும் குறிக்கத்தக்கன.

புராணங்களைச் சாடும் பெரியார் காவியத்தில், புராண மரபு நெறியில் ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் வகுப்பதும், நகரப் படலத்தில் ஈரோட்டுக்குக் கோட்டையும் அகழும் கூறிப் பழ நூல் செய்திகளையெல்லாம் தொகுத்துரைப்பதும் சுவைமிக்கன எனினும், வறும் புனைந்துரையாய் அமைகின்றன. ஆசிரியர்தம் புரட்சியும் சீர்திருத்தமும் இவற்றை விலக்கிப் புறநெறிப் படுத்தி யிருக்கலாம்! இறுதி இணைப்பாகப் பிழைதிருத்தப்பட்டி நான்குபக்க அளவில் நடப்பது மறுபதிப்பில் திருத்தப்பெறும் என நம்பலாம். காவியம் பாடவல்ல திறத்தவர் அரிய கால நிலையில் பெரியார் காவியம் அருமையாகச் செய்துள்ள ஆசிரியர்தம் முயற்சி வெல்க!

—இரா. இளங்குமரன்

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| குயில்பாட்டு ஆராய்ச்சி—கு. சிவஞானம் | 6 | 00 |
| நம்பிக்கையும் நற்செயலும் —பேராசிரியர் மு. அப்துல் கரீம் | 8 | 00 |
| உணவுப் பொருள் மருத்துவ குண அகராதி —சிவாச்சாரியார் | 5 | 00 |
| புதை மணல்—லட்சுமி | 10 | 50 |
| இலங்கைத் தமிழா, இது கேளாய்—கலைஞர் மு. கருணாநிதி | 3 | 90 |
| கம்ப ராமாயணம்—அ. க. கணேசன் | 4 | 00 |
| வால்மீகி ராமாயணம்— ,, | 8 | 00 |
| வெற்றிக்கு வழிகள்—பி. எஸ். கிருஷ்ணசாமி | 9 | 00 |
| கற்புக்கரசியின் சிறப்பு—ஹா. கி. வாலம் | 9 | 00 |
| இந்து சமயக் கருத்துக்கள்—மாருதி ராசன் எம்.ஏ. | 15 | 00 |
| யோகாசன மருத்துவம்—ஸ்ரீ நடராஜ சிவாச்சாரியார் | 10 | 00 |
| வடமொழி இலக்கிய வரலாறு —டாக்டர் கா. கைலாச நாத குருக்கள் | 12 | 00 |
| ஏரிக்கரையில் சில ஊமைக்குயில்கள் —ஆர். ஈ. சந்திரசேகன் | 9 | 00 |
| புதுமைப் பித்தனின் துரோகம்—ஆதவன் | 9 | 00 |
| நேபாள நாட்டில் சில அனுபவங்கள் —எம். பரதபாண்டியன் | 9 | 00 |
| அகப்பொருளும் புறப்பொருளும் —எம். நாராயண வேலுப்பிள்ளை | 8 | 50 |
| தரங்கம்பாடித் தங்கப் புதையல்—பெ. தூரன் | 2 | 50 |
| குழந்தை வைத்தியம்—டாக்டர் அ. கன்னியப்பர் | 7 | 50 |
| Valmiki's Ramayanam and Vyasa's Mahabaratham —A. K. Ganesan | 20 | 00 |

---

## பாம்பன் குமரகுருதாச அடிகளின் நூல்கள்

| | | |
|---|---|---|
| சண்முக சகஸ்ரநாம அர்ச்சனையும், அஷ்டோத்திர நாமார்ச்சனையும் குமாரஸ்தவமும் | 1 | 50 |
| சிறுநூற்றிரட்டும் குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதியும் | 3 | 00 |
| பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம் | 4 | 00 |
| சண்முக சகஸ்ரநாமார்ச்சனை விளக்க உரையுடன் | 3 | 50 |
| சிவஞானதீபம்; செக்கர்வேள் செம்மாப்பு; செக்கர்வேள் இறுமாப்பு; கனவதிகாரம் | 3 | 00 |
| அசோக சாலவாசம் | 2 | 00 |
| Shanmuga Kavacham | 2 | 00 |
| | 19 | 00 |
| இப் புத்தகங்களை மொத்தமாக வாங்குவோருக்குக் கழிவு | 2 | 00 |
| ஆக, குறைந்த விலை | 17 | 00 |

# கழகப் புதிய வெளியீடுகள்

## எலும்புப் பாதுகாப்பு

ஆசிரியர்: டாக்டர் எம். சி. இராசமாணிக்கம்,
M B.B S., M S. (General)., M.S. (ortho), M. A. M.S. (ortho), F. I. C. S., F. R S. H. (London)

எலும்பின் அமைப்பு, அதன் சிறப்பு, எலும்பு முறிவுகளின் வகை, மூட்டு நோய்கள், இளம்பிள்ளை வாதம், முதுகு வலி இன்ன பிற எலும்புபற்றிய நோய்களும், அவற்றுக்குரிய மருத்துவ முறைகளும், அம் முறைகளில் ஏற்பட்டுள்ள புதுமை மருத்துவங்கள்பற்றிய செய்திகளும் விளக்கப் படங்களுடன் இந்நூலின்கண் எளிய இனிய தமிழில் எழுதப்பெற்றுள்ளன. எல்லாரும் படித்துப் பயன்பெற வேண்டிய இந்நூல் பொது நூலகங்களிலும் இடம் பெறுமாயின் பொதுமக்கள் பெரிதும் பயன் பெறுவர். ரூ. 12 00

## இஸ்லாமும் தமிழும்

ஆசிரியர்: அப்துல் கரீம், எம்.ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர், காதிர் முகைதீன் கல்லூரி,
அதிராம்பட்டினம்.

இஸ்லாம் சமயத் தோற்றம், கொள்கை, வளர்ச்சி இஸ்லாமியப் புலவர்கள் தமிழுக்குச் செய்திருக்கும், செய்துவரும் தொண்டுகளை, தமிழில் வெளிவந்துள்ள இஸ்லாமிய இலக்கியங்கள் இன்ன பிற செய்திகள் அடங்கிய அரிய ஆராய்ச்சி நூல். முன்னர்க் கழகம் வெளியிட்டுள்ள கிறித்துவமும் தமிழும், பௌத்தமும் தமிழும், சமணமும் தமிழும் போன்ற சமயத் தொடர்புடைய ஆராய்ச்சி நூல்களுள் இஃதும் ஒன்றாகும். வரலாற்று ஆராய்ச்சியாளர்க்குப் பயன்படத் தக்க இந்நூல் எல்லாப் பொதுநூலகங்களிலும் இருக்கவேண்டியது மிகமிக இன்றியமையாததாகும். ரூ 16 00

---

# விழுந்த தமிழ்ப்பள்ளியைப் புதுப்பிக்கத் தமிழன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

ஆந்திர மாநிலம், சித்தூர் மாவட்டத்திலுள்ள விநாயக புரத்தில் ஓராசிரியர் தமிழ்ப்பள்ளியொன்று மழையால் இடிந்து விழுந்துவிட்டது. அதனைப் புதுப்பித்துக் கட்டவேண்டியிருப்பதால் அதற்கு 2 000/- ரூபாய் தேவைப்படுகிறது எனவே இதனைக் கண்ணுறும் தமிழ் அன்பர்கள் தம்மாலியன்ற பொருளுதவி அளிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம் பள்ளி ஆசிரியர்களும், மாணவர்களும் தத்தம் கையில் கிடைக்கும் சிறு தொகையினை அனுப்பி ஆந்திரத்தில் தமிழ்ப்பள்ளி ஒன்று தொடர்ந்து நடக்க உதவுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்

உதவி அனுப்பவேண்டிய முகவரி :

ஆசிரியர், D. N. கோவிந்தசாமி,
13-117, பனைக்கோயில் தெரு,
புதுப்பேட்டை, நகரி. 517590 (A.P.)

அப்பர் அச்சகம், சென்னை-1.